சற்குருப்யோ நம:

ஸ்ரீ ஐயண்ண தீட்சிதரவர்கள்

சம்ஸ்கிருதத்தி லியற்றிய

# வியாசதாத்பர்ய நிர்ணயம்.



இது

கோயிலூர் மடாதிபதியா யெழுந்தருளி யிருந்த

திருக்கள ராண்டவ ரென்னும்

ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகரின் பாதசேகரராய

ஸ்ரீ காசிகாநந்த சுவாமிக ளவர்களால்

தமிழில் வசநவடிவமாக மொழிபெயர்க்கப்பட்டு,

மங்கலம் - ஷண்முக முதலியாரால்

சென்னை

கோமளேசுவரன் பேட்டை,

சச்சிதாநந்த அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.



1915.





 [விலை அணா எட்டு.

# முகவுரை.

20-4

இவ்வுலகத்திலுள்ள சகல ஜீவர்களாலும் விரும்பப்படும் தர்மார்த்த காமமோக்ஷங்களென்னும் புருஷார்த்தம் நான்கனுள் மோக்ஷமொன்றே பரமபுருஷார்த்தமாகும். அப்பரம புருஷார்த்தத்தை அடைய வேதங்கள் சமுத்திரம் போன்றிருக்கின்றமையின், அவற்றைச் சுருக்கிப் பாணினி, கௌதம, கணாத, ஜைமினி, கபில, பதஞ்சலி, வியாஸாதி மாஹாமுனிவர்களால் சூத்திரங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றுள், சகல ஜீவர்களால் விரும்பப்படும் பரம புருஷார்த்தத்தையும் சித்த சாந்தியையும் கொடுப்பது வியாஸ பகவானியற்றிய பிரஹ்மசூத்திரங்களேயாமெனப் பண்டிதர்களாற் றுணிபப்பட்டுள்ளது.

அச்சூத்திரங்கட்கும் ஸ்ரீகண்ட, ராமாநுஜ, மத்துவ, வல்லப, சங்கராசாரியர் முதலியோர்கள் தாமியற்றிய இக்காலப் பிரசித்த பாஷ்யங்களில் தத்தம் மதத்தை ஸ்தாபித்தும், அந்நிய மதங்களைக் கண்டித்தும் இருக்கின்றனர். அவ்விதப் பாஷ்யா பூஷணங்களையுடைய சூத்திரங்களை யியற்றிய வியாஸபகவனது பரமதாத்பர்யம் யாண்டையதெனத் துணியப்பெறாமையின், அதனைத் துணியும் பொருட்டு, திருவிசைநல்லூரில் சமாதியுற்றிருக்கும் அய்யாவாளென வழங்கும் ஸ்ரீதர வேங்கடேச குருவின் புதல்வரும் சிஷ்யரும், வேதாந்த சித்தாந்த ரகசியார்த்தத்தைப் பிரகாசிப்பிக்கும் குசலருமாய அய்யண்ண தீக்ஷிதரென்னும்பெயரியவித்துவானால் வியாஸதாத்பர்ய நிர்ணயம் என்னு மிக்கிரந்தம் சம்ஸ்கிருதத்தில் கத்திய

ரூபமாக இயற்றப்பட்டுள்ளது. அவர் இதன் முதற்பரிச்சேதத்தில் சகல மதஸ்தர்களும், ஸ்ரீ வியாஸபகவானை அத்வைதியென அநுவதித்து நிராகரணஞ் செய்திருத்தலின், அளவிறந்த சுருதி யுக்தி அநுபவ, வாதிப் பிரதிவாதி, மத்தியஸ்த பூர்வகம் வியாஸபகவானது தாத்பர்யம் அத்வைதமேயெனப் பசுமரத்தாணிபோல் ஸ்தாபித்தும், இரண்டாம் பரிச்சேதத்தில் அவ்வித அத்வைதத்தி லுபதேசிக்கப்படும் பிரஹ்மப்பிராப்தியின் சாதனம் சகுணப் பிரஹ்மமேயெனவும், அத்வைத ஆசாரியராய அப்பய்யதீக்ஷிதர்களியற்றிய சிவதத்துவவிவேகாதி சாஸ்திரங்களின் தாத்பர்யமுணராது பலர் பலவாறாகக் கூறுகின்றனர்; அதுவும் யதார்த்தமுணராமையாலேயாம் எனவும், அப்பய்ய தீக்ஷிதர்களினது தாத்பர்யமும் சகுணப் பிரஹ்மத்தின் கண்ணே எனவும் மந்தபுத்தி யுடையவர்களும் சந்தேக விபரீதமின்றியுணர்ந்து கொள்ளுமாறு ஸ்தாபித்திருக்கின்றது. அக்கிரந்தம் சம்ஸ்கிருதத்தில் தர்க்க வியாகரணம் படித்து வேதாந்த சாஸ்திர முணர்ந்தார்க்கேயன்றி மற்றையோர்க்குப் பயன் படாமையையும், தமிழ் பயின்றார்க்கும் பயன்படாமையையும் கருதிக் கோவிலூர் மடாதிபதியாய் எழுந்தருளியிருந்த திருக்கள ராண்டவரென்னும் ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞானதேசிகரின் பாதசேகரராய ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகளவர்களால் செவ்விய வசநவடிவமாக யாவரும் உணருமாறு தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.

ம. ச.



# வியாஸதாத்பர்ய நிர்ணயம்.

## பாயிரம்.



சீர்மிகும் வந்நிக் கரிமுகன் றனையுஞ்
சிறப்புறு மறுமுகன் றனையும்,
பார்புகழ் கொற்ற நாயகன் றனையும்
பகர்நெல்லை நாயகி தனையும்,
சீர்தரும் வீர சேகர ஞான
தேசிகன் றனையுமே யெந்தங்,
கூர்மையி லகத்தி லனுதின நாடிக்
கொண்டுமே துதிதனைப் புரிவாம்.

திருவமர் நான்கு வேதத்தின் பொருளைச்
செவ்வனே யறியுமாற் றவிலா,
மருவம ருலகோ ரறிந்துமுத் தியைத்தான்.
மருவவே பிரமசூத் திரத்தை,
அருவமர் தேவ வாணியி லமைத்த
வண்ணன்மா வியாசவெம் மிறையைக்,
கருவதிங் கொழிபச் சிரமனம் வாக்குக்
கரணங்க ளான்மிகத் தொழுவாம்.

செப்பிருங் கயிலைப் பதியில்வீற் றிருக்குஞ்
செய்யவிவ் வீசனை மநுடர்க்,
கொப்பருஞ் சுருதிப் பொருளினை யுணர்த்த
வொண்மதி யுரகமம் பிகையைத்,
தப்பிட விட்டு வந்தவ தரித்த
தன்மையாஞ் சங்கர முனியின்,
திப்பிய பாதங் களைத்தின நாடிச்
சிந்தையுட் கசிந்திடத் துதிப்பாம்.

திருவளர் கைலைப் பதியினு யகனே
 சிறந்தவிக் காரையம் பதியில்,
அருளமர் வைஸ்ய குலத்தினிற் றோன்றி
 யருளிய வேகமாம் வீட்டைத்,
தெருளமர் முத்தி ராமலிங் கேச
 தேசிகன் றிருவடி யதனை,
இருளறத் தினமு மிடையறா துளத்தி
 லிருத்தியே துதிதனைப் புரிவாம்.

உச்சியம் போதிற் றில்லையம் பதியி
 லார்வல மாயிலந் தேர்றும்,
பிச்சையேற் றுண்டு மௌனமேற் கொண்டு
 பெருஞ்சமா தியினில்வீற் றிருந்த,
நச்சியே யெவருங் காண்பதற் கரிய
 நவவரு ளசல குருவை,
மிச்சைபாந் தோற்ற மின்றியே யொழிய
 விரும்பியே பணிந்திட லொழிப்பாம்.

சீருறு மறையி னுண்ணிய பொருளைச்
 செவ்வனே யுணர்திற மில்லா,
ஆருறுஞ் சீவர் தமக்குநன் ஞான
 மமலமாய் விளங்குப தேசஞ்,
சீருறச் செய்த சிதம்பர ஞான
 தேசிகன் றிருவடி மனதில்,
பாருறத் தியானஞ் செய்துமெஞ் ஞான்றும்
 பாடியே வினைத்திர ளொழிப்பாம்.

இகழ்தருந் தனத்தைப் பொய்யெனக் கருதி
 யெவருமே மகிழுதற் குரிய,
புகழ்தருஞ் சந்நி,யாசத்தைப் பொருந்திப்
 புவியுளோர் போற்றவே நின்று,

திகழ்தரு மென்ற னருளிறை வீர
சேகர ஞானதே சிகன்றன்,
புகழ்தரு மடிக டினந்தோ றும் வாழ்த்திப்
போற்றியே மூலநோ யொழிப்பாம்.

நிறந்தருந் தெய்வ வாணியி னன்கு
நிகரிலை யண்ணநீட் சிதனர்,
சிறந்திட வமைத்த வியாஸதாத் பரியச்
செப்பரு நின்னையந் தனையே,
இறந்திடா நிலையார் தண்டமிழ் மொழியி
லிருபரிச் சேதங்கத் திபமாய்த்,
துறந்துள காசி காநந்த னென்னுந்
தூயனன் பினிவியற் றினனல்.

பாயிரம்-முற்றுப்பெற்றது.







ஓம்

த த் ச த்

பரப் பிரஹ்மணே நம:

# வியாச தாத்பர்ய நிர்ணயம்.

இலக்குமி கொழுந னிளநிலா மௌலி
யிறைஞ்சிடு மியல்புடை யதுவாய்,
விலக்கமி லிறையு மவர்தமைப் பணியும்
விகலுபி ராயுமே போக,
நலக்குறு பதமாய் விசுவமே யாயு
நற்சச்சி தாநந்த வெனது,
பலக்கதி ருருவ மாயுமே யிருக்கும்
பரப்பிர மத்தையாம் பணிவாம். 1

எவரது பார்வை யகிலலோ கத்தி
னிருளக வீட்டமா மதனைத்,
தவறற வொழிக்குஞ் சோதியா முரைக
டண்ணளி விரத்தியும் பத்தி,
கவருடைப் பகவன் ஞாநமுண் டாக்குங்
கனியுமா மெவ்வுப தேசங்,
தவறிலா நந்தக் கடல்கடை கிரிசீ
தரவெங்க டேசனைப் பணிவாம், 2

சீர்மிகு சிவேங் கடபதி புதல்வன்
சிறந்தவல் யத்திரி யோடு,
வர்மிகு மொருதா யகட்டுதி பருசன்
யிணையில பண்ணதிட் சிதனும்,
பார்புகழ் கவிதான் வியாஸதாத் பரியப்
பகர்தரு நிர்ணயந் தனையே,
சார்புறத் தேவ வாணியிற் றுனே
சமைத்தனன் புலவரின் புறவே. 3

தத்துவ முணரும் வேட்கையர் தாமுந்
தகுமிக வழக்கினர் தாமும்,
வித்தையின் மிகவும் மேன்மையை யடைந்து
வேதசம் மதமுளோர் தாமுஞ்,
சுத்தம தாகப் பட்சபா தமதைத்
தொடர்பற நீக்கியே யிந்தத்,
தத்துவ நூலுட் கருத்தினை யமைவாய்த்
தடையற வறியவே வேண்டும். 4



ஓம் தத்சத்

# வியாச தாத்பர்ய நிர்ணயம்.



## முதற் பரிச்சேதம்.

ஈண்டுப் பரமகருணையுடைய பகவான் நாராயணர் சகல லோகாநுக்கிரகத்தின் பொருட்டு வியாஸரூபமாயவதரித்து, பரஸ்பர விருத்தமாய்ப் பிரதீதியாகப்பட்ட வேதாந்த வாக்கியார்த்தத்தை யறியச் சமர்த்தமில்லா மந்தபுத்தியுடைய ஜீவர்கட்குச் சர்வோபநிஷத் மகா தாத்பர்ய நிர்ணய வாயிலாகப் பரமபுருஷார்த்த சாதந சொரூபமான பரதத்துவ நிர்ணயத்தின் பொருட்டு அதைச் சூசிப்பிப்பவைகளான 'அதாதோபிரஹ்ம ஜிஜ்ஞாஸா' என்பது முதல் 'அநாவிருத்தி8 சப்தாத்' என்பதீறுன சூத்திரங்களைச் செய்தார்.

அது, "அந்த நாராயணருடைய அம்சமாயபகவான் வாதராயணர், மந்தபுத்தியோடு கூடிய மநுஷ்யர்களை அதியுந்நதத்தோடு கூடிய கிருபையாற் பார்த்து, சர்வ ஜீவர்கட்கும் வேதாந்தார்த்தமோ ஒருதன்மைத்தாகப் பிரதீதியாகாமல் நாநாவாகப் பிரதீதியாகின்றது; இக் காரணத்தான் அற்ப புத்தியுடைய புருஷன் எப்படிப் பிரஹ்மத்தை யறிவன் என்று இங்ஙனம் கருணையுடைய உத்தமமான மதியோடு கூடியவ(வியாஸ)ர் மீண்டும் நன்ருகச் சிந்தித்து, சங்கராது ஆஞ்ஞையால் வேதாந்த வாக்கியார்த்தத்தைப் பிரஹ்ம சூத்திரரூபமாகச் செய்தார்" என்று சைவ ஏகாதச ருத்ர சம்ஹிதையிற் கூறப்பட்டிருக்கின்றது. அந்த வியாஸ பகவானுற் செய்யப்பட்ட சூத்திரங்கள் ஸ்பஷ்டமில்லாத அபிப்பிராயத்தை யுடையனவாயிருக்கின்றன. ஆதலின், அவற்றிற்

குப் பகவத்பாத, பட்டபாஸ்கர, ஸ்ரீகண்டாசார்ய,யாதவப்பிரகாச, ராமாநுஜ, மத்வ, சித்பிரகாச, வல்லபாதி பாஷ்யக்காரர்கள் தங்கள் தங்கள் அபிப்பிராயார்த்தபரமாக வியாக்கியாநஞ் செய்தார்கள்.

அவற்றுள்,பகவத்பாதருக்கு ஜீவப்பிரஹ்மங்களின் அபேதம் ஸ்வாபாவிகமும் பாரமார்த்திகமும்,பேதமோ ஔபாதிகமும் அபாரமார்த்திகமும் ஆமென்னுமர்த்தம் அங்கீகாரமாம்;பட்டபாஸ்கருக்கோஜீவப்பிரஹ்மங்களினபேதம் ஸ்வாபாவிகமும் பாரமார்த்திகமும், பேதமோ ஔபாதிகமாயினும் பாரமார்த்திகமா மென்னும் அர்த்தம் அங்கீகாரமாம்;யாதவப்பிரகாசருக்கோ ஜீவப்பிரஹ்மங்களின் பேதமும் அபேதமும் ஸ்வாபாவிகமேயாமென்னும் அர்த்தம் அங்கீகாரமாம்;ஸ்ரீகண்ட ராமாநுஜாசார்யருக்கு இயல்பாயே ஜீவப்பிரஹ்மங்களினது பேதமும் விசிஷ்டாத்வைதமுமாம் என்னுமர்த்தம் அங்கீகாரமாம்; அங்ஙனமாயினும், சிவபரத்வ விஷ்ணு பரத்வங்களால் அம்மதங்கட்குப் பேதமாமென்றறிக. மத்துவாசாரியருக்கோ ஜீவப்பிரஹ்மங்களினது பேதமே ஸ்வாபாவிகமாமென்னுமர்த்தம்அங்கீகாரமாம்.இதில்“ஏ த்விஜர்களே! இந்த மார்க்கத்தைப் பிரயத்நத்தினும் ஸ்தாபிக்கவேண்டும்; வைதிகமார்க்கம் ஸ்தாபிக்கப்படின், சர்வமும் நன்கு ஸ்திரமாம். யாவன்,ஸ்தாபித்தற்குச் சாமர்த்தியமுடையவனோ அவன் நானே மோகஞ் செய்யாதொழிக; செய்வனேல், அவனைக்கொல்பவன்,பாபத்தையுடையவனாகான் என்பது வேதாந்த நிச்சயமாம். எவன் ஆற்றலற்றவனாயினும் சிரத்தையினனே ஸ்தாபித்தற்கு யத்நமுடையவனாவனோ, அவன் சர்வபாபங்களினின்றும் விடுபட்டவனாய்ச் சாக்ஷாத் ஞாநத்தை யடைகிறான். எவன் வித்தியாபிமாநத்தால்

வேதமார்க்கப் பிரவர்த்தகனைச்சலஜாதியாதியால்(தர்க்கங்களால்)ஜயிக்கிறானோ அவன் மஹாபாதக முடையவனாகின்றான்'' என்னும் ஸ்காந்தவசந பர்யாலோசனையால்வேதாந்த தாத்பர்ய விஷயசொரூபமான அர்த்தத்தினது நிர்ணயம் அவசியம் கர்த்தவ்யமாகலின் அதை நிர்ணயஞ்செய்தற்பொருட்டு இப் பாத்தாற் பிரவிர்த்தித்த வியாஸ பகவானுக்குப் பூர்வஞ் சொல்லப்பட்ட பாஷ்யக்காரர்கள் அங்கீகரித்த அர்த்தத்தின் மத்தியில் எது தாத்பரிய விஷயரூபமான அர்த்தம் என்னும் சம்சயத்தில், கேவலாத்வைதமே என்று நிர்ணயஞ் செய்யப்படுகிறது.

அற்றேல்,''ஏ மகாமுநிகளே! துவாபரயுகத்தில் துவாபரயுகத்தில் விஷ்ணுவியாஸரூபர், சங்கரர் நான்குசிஷ்யர்களோடு கூடவே அவதரிக்கிறார்'' என்பது முதலிய புராணவசநங்களால் ஸ்ரீமத் சங்கரபகவத் பாதாசாரிய சுவாமிகட்குச் சாக்ஷாத் சங்கராவதார ரூபத்தன்மை அறியப்படுதலின்,''சங்கரர் அந்தச்சூதசம்ஹிதையைப் பதினெண்முறை பார்த்துச் சர்வசுருதிகளினது மனதை ரமிக்கச்செய்யும் சாரீரக பாஷ்யத்தைச் செய்தார்'' என்னும் இது முதலியவற்றால் அச்சாரீரக பாஷ்யத்திற்கு ஸ்ரீமத் சூதசம்ஹிதையை மூலமாகவுடையதாந் தன்மை அறியப் படுதலினானும் பகவத் பாதாசார்ய சுவாமிகளின தங்கீகாரம் கேவலாத்வைதமே வியாஸ தாத்பர்ய விஷயம் என்னு மர்த்தத்திற்கே பிரமாணிக முடையதாந் தன்மையான் வெளிப்படையாய்ப் பிரதீதி யாகலின் மீண்டு மதனை நிச்சயித்தற் பொருட்டுக் கிரந்தாரம்பஞ் செய்தல் பயனில் கூற்றாமென்று புகலின்,சத்தியம்; அங்ஙனமாயினும் ''முதல்ரூபம் அநந்தன், அதன்பின்னோ இலக்ஷுமணன், மூன்றாவது

பலபத்திரன், கலியில் யாதாவதோர் அவதாரமாக ஜனிப்பன்" இது முதலியவற்றால் ராமாநுஜாசாரியருக்குச் சேஷாவதார ரூபத்தன்மை யறியப்படுதலின் "பகவான் போதாயனர் செய்த விரிவான பிரஹ்ம சூத்திர விருத்தியைப்பூர்வாசாரியர்கள் நன்றாகச்சுருக்கிச் செய்திருக்கின்றார்கள். அம்மத அநுசாரமாகச் சூத்திரங்கள் வியாக்கியானஞ் செய்யப்படுகின்றன. அதாதோ பிரஹ்ம ஜிஜ்ஞாஸா" என்பன முதலிய அப்பாஷ்ய சந்தர்ப்பத்தால் அப்பாஷ்யத்திற்குப் போதாயன சூத்திரவிருத்தி மூலமுடையதாந் தன்மை யறியப்படுதலினாலும், ராமாநுஜாசாரியரது அங்கீகாரார்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயம் என்னும் அர்த்தத்திற்குப் பிராமாணிகத்தன்மை பிரதீதியாகின்றது.

அங்ஙனமே "முதலாவது அநுமான், இரண்டாவது பீமசேனன், மூன்றாவதோ பூர்ணப்பிரஞ்ஞன், இம்மூவரும் பகவத்காரிய சாதகராவர்"என்னும் இது முதலியவற்றால் மத்வாசாரியருக்கு வாயுஅவதாரரூபத்தன்மை யறியப்படுதலின், அவரது பாஷ்யத்திற்கு அம்மதப் பிரசித்த பிரஹ்மதர்க்க மூலராமாயணாதி மூலமுடையதாந் தன்மை யறியப்படுதலினாலும் மத்வாசாரியரது அங்கீகாரார்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயம் என்னும் அர்த்தத்திற்குப் பிராமாணிகத்தன்மை பிரதீதி யாகின்றது.

அங்ஙனமே பட்டபாஸ்கர, யாதவப்பிரகாச, ஸ்ரீகண்ட,சித்சுக,சித்விவரண, வல்லபாதிகட்கும்அவ்வம் மதப் பிரசித்த வசநத்தாலறியப்பட்ட அவ்வத்தேவதாவதார ரூபத்தன்மையான் அவர்களது பாஷ்யத்திற்கு அவ்வம் மதப்பிரசித்த பிரமாண மூலமுடையதாந்தன்மை யறியப்படுதலினாலும் அவ்வவரது அங்கீகாரார்த்தமே வியா

ஸ தாத்பர்ய விஷயம் என்னும் அர்த்தத்திற்கும் பிரா மாணிகத்தன்மை பிரதீதி யாகின்றது.

ஆகவே பரஸ்பர விருத்தார்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றஅநேகபாஷ்யங்களைப்பார்க்கும் மந்தபுத்தியுடையவர்கட்கு வியாஸ தாத்பர்யவிஷய அர்த்தத்திற் சம்சயம் சம்பவித்தலின் அந்நிர்த்தாரணத்தின் பொருட்டு இக் கிரந்தாரம்பம் உசிதமாகலின், வியர்த்தமென்னுஞ் சங்கைக்கே யிடமின்று.

இவ்விடத்தி லிங்ஙன மிருக்குங்கால், சூதசம்ஹிதை போதாயந விருத்தியாதிகட்கும், அவற்றை மூலமாக வுடைய பாஷ்யங்கட்கும் வியாஸதாத்பர்ய விஷய அர்த்தத்தில் யாவும் பிராமாண்யமா? அல்லது அப்பிராமாண்யமா? அல்லது ஒன்றற்கேபிராமாண்யமா?என்று விசாரிக்கப்படுகிறது. அவற்றின்கண் எப்பொழுது சர்வத்திற்கும் பிராமாண்யமோ, அப்பொழுது வஸ்துவிற்கு நாநாரூபத்தன்மை பிராப்தமாம். இதுசம்பவியாது;விரோதமிருத்தலின். எக்கால் சர்வத்திற்கும் அப்பிராமாண்யமோ அக்கால் அவ்வித பாஷ்யப்பிரதிபாத்திய பேதாபேதாதி அந்யதம ஆவசிய தாத்பர்யத்தையுடைய சுருதி சூத்திரங்கட்கும் அப்பிராமாண்யப் பிராப்தத்தான் வேதாந்த சாஸ்திர நாசப்பிரசங்கம் வரும். ஆகலின், ஒன்றற்கே பிராமாண்யமென்னும் மூன்றுவது விகல்பம் எஞ்சுகின்றது. அந்தப் பிராமாண்யமும் இதுவே யென்று யாவராலும் நிச்சயித்தற்குச் சாமர்த்தியமின்று.

பகவத்பாத, பட்டபாஸ்கர, யாதவப்பிரகாச, ஸ்ரீகண்ட, ராமாநுஜ, மத்வ, சித்விவாண, வல்லபாதி பாஷ்யக் கிரந்தங்களை நன்றாகப் பார்த்துப் பூர்வமீமா

ம்ஸா நியாயத்தால் உபோத்பலிதமான அவ்வப் பாஷ்யத்திற் புகன்ற உபக்கிரமோபசம்ஹாராதி ஷட்வித தாத்பரிய லிங்காதியோடுகூடிய சுருதி சூத்திர சுவாரஸத்தினது பலாபல அநுசாரத்தால் இவ்வர்த்தமே வியாஸதாத்பர்ய விஷயமென்று நிச்சயித்தற்குச் சமர்த்தமாதலின், அதனைப் பிரதிபாதிக்கும் பாஷ்யமே பிரமாணமென்று கூறற்க; உரைத்த தாத்பர்ய லிங்காதியோடு கூடிய சுருதிசூத்திர சுவாரஸத்தினது பலாபல அநுஸாரத்தாலேயே சர்வ பாஷ்யத்திலும் தத்தம் அபிப்பிராயார்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமென்று நிர்ணயஞ் செய்திருத்தலின், அதில் விசேஷ பலாபல நிச்சயம் அசம்பவமாகலின்.

நம் முதலியோராலேயே யுக்தி சுருதி சுவாரசத்தினது பலாபல அநுஸாரத்தால் இவ்வர்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமாமென்று நிச்சயித்தற்குச் சமர்த்தமெனக் கூறற்க; அதில் யுக்தி மாத்திர பலத்தால் இவ்வர்த்தமே வியாஸதாத்பர்ய விஷயமென்று நிர்ணயஞ் செய்யப்படுகிறதென் றுரைக்கப்படுகின்றதா? அல்லது சுருதி மாத்திர பலத்தாலா? அல்லது சுருதியோடு கூடிய யுக்தி பலத்தாலா ? முதலது இரகஸ்யமன்று; விகல்பசஹனம் ஒல்லாமையின். அவற்றின் கண்ணும், உபக்கிரம உபசம்ஹாராதி ரூப யுக்தியால் வியாஸ தாத்பர்ய நிர்ணயஞ்செய்யப்படுகின்றதென்று பன்னுகின்றனை கொல்லோ? அல்லது, அநுமான விசேஷரூப யுக்திமாத்திர பலத்தால் பாதத்வ சொரூபத்தை நிச்சயித்து அதன் வாயிலாய் அவ்வர்த்தமே வியாஸதாத்பர்ய விஷயமென்று நிச்சயித்தற்குச் சமர்த்தமாமெனப் பகர்கின்றனை கொல்லோ? முதலதன்று; உபக்கிரமோபசம்மாராதி யுக்திக்குச் சுருதியோடு

கூடிய தன்மையான் மூன்றுவது விகல்பத்தோ டபேத மாய் முடிகின்றமையின் யுக்திமாத்திரத்தான் என்னும் பக்ஷத்தின துற்பத்திக்கே சம்பவமின்மையின்; இப்ப க்ஷத்திற்கு மேற்புகலும் மூன்றுவது பக்ஷ தூஷணத்தி ஞனே அநேகமாய்த் தூஷிக்கப்பட் டிருத்தலினுனும். இரண்டாவது மன்று; "இம்மதி தர்க்கத்தால் நிவர்த் திக்க ஒவ்வாது","தர்க்கத்திற்கு ஸ்திதியின்மையின்", "அநுமாதாக்களாய குசலர்களால் யத்நத்தால் அநு மிதிக்கப்பட்ட அர்த்தமும், அறிவின்மிக்க அந்நிய பண்டிதர்களால் வேறு பிரகாரமாகச் சொல்லப்படு கின்றது" என்னும் சுருதி சூத்திர அபியுக்த வசனங் களால் வேதாந்தத்தானே அறியப்படும் பரதத்வ நிர்ணயத்தில் யுக்திமாத்திரோ பாயமானது நிராகரிக் கப்பட்டமையின், அதன்வாயிலாக அவ்வர்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமென்று நிச்சயித்தற்குக் கூடுமென்னுமிது சசவிஷாண சமாநமா யிருத்தலின். இரண்டாவது மன்று; "நான் பிரஹ்மமா யிருக்கின் றேன்", "அது நீயா யிருக்கின்றாய்", "இவ்வாத்மா பிர ஹ்மம்", "பிரக்ஞாநம் பிரஹ்மம்", "ஆநந்தம் பிரஹ் மம்","ஒன்றே அத்துவிதீயம் பிரஹ்மம்" என்பனவாதி அபேத சுருதிகட்கும், 'ஆத்மாவையும் பிரேரிப்பவனை யும் வேருகவறிந்து, "இரண்டு சுபர்ணங்கள்" என்பன முதலிய பேத சுருதிகட்கும் சமாநத்தன்மை யிருத்த லின் சுருதிமாத்திர பலத்தால் இவ்வர்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமென்னும் நிர்ணயங்கூடாமையின். இத ஞனே "சகலருக்கும்வேதாந்தார்த்தமோ,ஒரு தன்மை யாக விளங்காது, நாநாவாக விளங்குகின்றது; இக்கார ணத்தான் அற்பபுத்தியையுடைய புருஷன் எங்ஙனம்

பிரஹ்மத்தை யறிவன்'' என்று முன்னமே உதாகரிக்கப்பட்டிருக்கின்றது. மூன்றாவது மன்று;உபக்கிரமோபசம்ஹாராதிரூப யுக்தியோடுகூடிய சுருதி பலத்தானேயே அவ்வப் பாஷ்யங்களில் சர்வ பாஷ்யக் காரர்களால் தங்கள் தங்கள் அபிப்பிராயார்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமென்று நிர்ணயஞ் செய்யப்பட்டிருக்கவின், அவ்வித பாஷ்யாதிக் கிரந்தங்களை நன்கு பார்த்து நம்மனோ ரபேக்ஷையால் சர்வக்ஞர்களான பிராசீன கிரந்தக் காரர்களாலும் யுக்தியோடு கூடிய சுருதிபலத்தால் பிரதிவாதி வாக்கைப்பிணைக்கும் வாயிலாய்ச் சகல ஜனங்களின் இருதயத்திற் செல்லும்படி இவ்வர்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமென்று நிச்சயஞ் செய்யாமையானும், தத்தம் மதமாத்திர அபிமான நிறைந்து விசிரிம்பித்து ஊர்த்த சப்த மாத்திரப் பிரயோஜனத்தை விரும்பும் கிஞ்சிஞ்ஞர்களாகிய நம் முதலியோர்களாலே யுக்தியோடு கூடிய சுருதி பலத்தால் இவ்வர்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமென்று நிச்சயித்தற்குச் சமர்த்தம் என்னும் இது பிராந்தி காரியமாக விருத்தலின்.

அற்றேல், இங்ஙனமிருக்கின், வியாஸ தாத்பர்ய விஷயரூப அர்த்த நிர்ணய குதூகல சூர புருஷனை பிரபு சிரோமணியானவன் சபைக்கு வந்து ஒருதினமுதல் மாஸ பரியந்தம் துவைதாத்வைத விசாரஞ் செய்யுங்கால் அவ்விரண்டு பக்ஷங்களினது மத்தியில் ஒன்றற்குப் பிராமாண்யமென்று மத்தியஸ்த முகத்தால் நிச்சயஞ்செய்து அம்மதப் பிரவேசமே அங்கீகரிக்கப்படும் என்று எட்டைக் கிரகித்தல் பூர்வகம் சமய நியமனஞ் செய்து கொண்டு அச்சபையிற் பிரவேசித்திருக்

கும் மத்தியஸ்த வித்வான்களினது சந்நிதான பலத்தால் நம்முதலியோராலேயே சுருதி யுக்தி பல சுவாரஸத்தின் பலாபல அனுஸாரத்தால் இவ்வர்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமாமெனநிச்சயித்தற்குச்சமர்த்தமென்று கூறின், அற்றன்று; முற்புகன்ற பிரபு கிடைத்தலே துர்லபமாம். அந்தப் பிரபு கிடைக்கினும் மேற்புகலும் ரீதியால் மத்தியஸ்தரே யின்மையின் அவர் சந்நிதியிற் பாதத்வம் நிர்ணயஞ் செய்யப்படும் என்னும் இது பிரதிஞ்ஞா மாத்திரமாகலின். ஆண்டு, மத்தியஸ்தத் தன்மை என்பது வாதி பிரதிவாதி அங்கீகரித்த பக்ஷமிரண்டினும் தன் பக்ஷத் தன்மை அபிமானமின்றியதோடு அப்பக்ஷங்கட்குப் பலாபல நிர்ணய குசலத்தன்மை என்று கூறவேண்டும். இதுவும் பாஹ்ய மதத்தில் பிரவேசித்திருப்பவர்கட்குச் சம்பவிக்குமென் றுரைக்கப்படுகின்றதா? அல்லது கபிலாதி மதத்திற் பிரவேசித்தவர்கட்குச் சம்பவிக்கின்றதென்று பகரற்பாற்றோ? அல்லது வேதாந்த சாஸ்திரத்திற் பிரவேசித்தவர்கட்குச் சம்பவிக்கிறதென்று அறைகின்றனை கொல்லோ? முதலாவதன்று; பௌத்த ஆருகத சார்வாகாதி பாஹ்ய மதப் பிரவிஷ்டர்களுக்கு வேத அப்பிராமாண்ய வாதித்தன்மையான் உபநிஷத் அத்தியயன மின்மையோடுகூட அதிலுள்ள உபக்கிரமோபசம்ஹாராதி ஷட்வித தாத்பர்ய லிங்கசுவாரஸத்தினதுபலாபல நிர்ணயசாமர்த்தியமின்மையின், அவர்கட்குமத்தியஸ்தத் தன்மைக்கே பிராப்தமின்மையின், வேதாக்ஷர சிரவணத்திலும் அநதிகாரிகளாகிய அவர்களினது சமீபத்தில் வேதாந்த விசாரத்திற்குப் பாபமுண்டாக்குந் தன்மையானும். அது "அதன் பின்னர்ச் சொல்லப்படுகின்றது; வேதத்தைச் சமீபத்திலிருந்து கேட்கும் இப்

புருஷனது சுரோத்திரத்தைப் பாதரசம் அரக்கு இவை களாற் பூரணஞ் செய்யவேண்டும்; (வேதத்தை) உச் சரிக்கின் நாவைத் துண்டிக்க வேண்டும்; தாரணம் செய்யின் சரீரத்தைப் பேதநஞ் செய்க" என்று கௌ தம தர்மத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. இரண்டாவ தன்று; கபில கணாத கௌதமாதி மதப் பிரவிஷ்டர்கள் இப்பொழுது ஓரிடத்திலும் பார்க்கப் படாமையின், அவர்களது மத்தியஸ்தத் தன்மைக் கல்பனம் சுவரின் றிய சித்திரத்திற்குச் சமானமாக விருத்தலின், ஜீவா நேகத் தன்மை பிரபஞ்ச சத்தியத் தன்மை பர மேஷத் திரக்ஞ பேதவாதியபிமானத்தாற் பக்ஷபாதி யாகலின், அவர்கட்கு முன்னுரைத்த மத்தியஸ்தத்தன்மை அத் தியந்தம் பொருந்தாமை யானும். மூன்றாவது மன்று; வேதாந்த சாஸ்திரப் பிரவர்த்தக அநேக பாஷ்யக்கார மதப் பிரவிஷ்டர்களில் பகவத்பாத, ராமாநுஜ, மத்வ, ஸ்ரீகண்ட மத நான்கிற் பிரவிஷ்டர்களே அநேகமாக விருத்தலின், அவர்கட்கும் பரஸ்பர விருத்த பேதா பே தாதி அந்யதம கோடி அங்கீகார மாகலின், அவ்வுபய வாதி சம்மத முன்னுரைத்த மத்தியஸ்தத் தன்மை, ககன குசுமத்திற்குச் சமானமா யிருத்தலின், வாதி பிரதிவாதி ஞாத தாரதம்மிய நிர்ணய மாத்திரப் பிர யோஜந வியாபாரத்தில் சரிதார்த்த மாகலின், தத்துவ நிர்ணய பரியந்த பிரயோஜன வியாபாரத்தில் அவர்களி னது பரம்பரையாகக்குருஉபதேசத்தாற் கிடைத்த தம் மத ஹாநி எழுப்பிய துராக்கிரஹத்தை நிவர்த்திப் பதற்கு ஆற்றலின்மையானும்.இதனானே "வாதி துர்ப் பலமின்றி, மத துர்ப்பலமின்று" என்னும் ஆபாணகாது வசநம் நன்கு பொருந்துகின்றது. ஆகலின், யுக்திமாத்

திர பலத்தாலாவது, சுருதிமாத்திர பலத்தாலாவது, யுக்தியோடுகூடிய சுருதி பலத்தாலாவது, மத்தியஸ்த வித்துவான்களினது சந்நிதான பலத்தாலாவது, அவ்வவ் வாதி மாத்திரம் அங்கீகரித்த கூடசாக்ஷி வாக்கிய சமாந சூதசம்ஹிதை போதாயந விருத்தியாதியா லநுக்கிரஹிக்கப்பட்ட பகவத்பாத ராமாநுஜாதி பாஷ்யக்கிரந்த பரியாலோசனையாலாவது, இவ்வர்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமென்று ஒருவராலும் நிச்சயஞ் செய்தற் காற்றலின்று.

அங்ஙனமாயின், உம்மால் இவ்வர்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமென்று எங்ஙனம் நிச்சயஞ் செய்யப்படுகின்றதென்று பகரிற்,பகருதும். எங்ஙனம் ஸ்தோத்திர பாஷ்யத்தில் அரி அரர்களினது மத்தியில் யாவருக்குச் சத்வாசிரயத்தன்மை என்னும் சம்சய முண்டாகுங் கால் "நாகர திராவிட வேஸரம் (என்னும் பெயர்களையுடைய வாகனங்கள்) கிரமமாகச் சத்வ ரஜஸ் தமசுக்கள் (குணங்கள்) மஹீசுரரும் உர்வீபதியும் வைசியரும் (பிராஹ்மணக்ஷத்திரிய வைசியரும் ஜாதிகள்) அரியும் தாதாவும் அரன் முதலியோரும் (விஷ்ணு பிரஹ்மா ருத்திரன் முதலியோரும்) தேவர்கள்" என்னும் மத்தியஸ்த சில்ப சாஸ்திர வசந பலத்தால் விஷ்ணுவிற்கே சத்துவாசிரயத் தன்மை என்று வேதாந்தா சாரியர்களாற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. அல்லது, எங்ஙனம் சதுர்வேத தாத்பர்யசங்கிரகத்தில் சிவ நாராயணர்களினது மத்தியில் எவரது நமஸ்காரம் சேஷித்தன்மையாகின்றது என்னுஞ் சம்சய முண்டாகுங் கால்"வஜ்ரிணி முத்திரையாற் சக்ரனை (இந்திரனை)யும்—பத்மினி முத்திரையால் விதியை

(பிரமாவை)யும், சங்கினி முத்திரைபால் கேசவனை(விஷ்ணுவை)யும், சிரசில் அஞ்சலி முத்திரையால் ருத்திரனையும் பார்க்கத்தக்கது" என்னும் மத்தியஸ்த பாத சாஸ்த்ர வசந பலத்தை யநுசரித்து "ஏ சங்கர! யாது சங்கினி முத்திரை? யாது வஜ்ரணி முத்திரை? யாது கமலினி முத்திரை பாதனுல் உபதேசிக்கப்பட்டதோ, அவற்றல் வேறு தேவர்களுக்கு அபிநயஞ் செய்யப்படுகின்றது. உமக்கு காபுட அஞ்சலிமுத்திரையால் தலையில் ஸ்பரிசஞ் செய்யப்படுகிறது" என்னும் இதனுல் சிவனது நமஸ்காரத்திற்கே சேஷித்தன்மையாகிறது என்று சுதர்சன ஆசாரியரால் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது; அஃதொப்ப, இவ்விடத்திலும் முற்புகன்ற பகவத்பாத ராமாநுஜாதி அநேகபாஷ்யக்கார அபிமதார்த்தங்களினது மத்தியில் எவ்வர்த்தத்தில் ஸ்ரீவியாஸ பகவானது தாத்பர்ய மென்னுஞ் சம்சய முண்டாகுங்கால், அதனை நிர்ணயிக்கும் ஆகாங்க்ஷையில், நம்முதலியோரைக் குறித்து மத்தியஸ்த்தத் தன்மையாற் பொருந்திய, கபில கணாத கௌதம பதஞ்ஜலி ஜைமினி சாஸ்திரங்களாகிய சூத்திர பாஷ்ய வார்த்திக விருத்திக் கிரந்தங்களும் பாசுபத பாஞ்சராத்திர பௌத்த ஆர்ஹத சார்வாக சாஸ்திரங்களுமாய பத்துக் கிரந்தங்களில் உரைத்த ரீதியால் "எது பரிபந்தம் அந்நிய மதம் நிராகரிக்கப்பட வில்லையோ அது பரிபந்தம் தன் மதம்ஸ்தாபிக்கப்படாத தாகின்றது" என்னும் நியாயத்தால் தன் மதஸ்தாபனத்தின் பொருட்டு அந்நியமத நிராகரண பிரஸ்தாவத்தில் கபில கணாதாதிகளால் கேவலாத்வைதமேஸ்ரீபகவான் வியாஸ தாத்பர்ய விஷயமென்று உணர்ந்து அநுவாதஞ் செய்து நிராகரிக்கப்பட்டிருத்தலின், அவ்வத்வைதமே ஸ்ரீபகவான் வியாஸ தாத்பர்ய விஷய

மென்று நிர்ணயஞ்செய்யப்படுகின்றது. அது கௌதம மஹரிஷியினால்‘விப்பிரதிபத்தியில் சாக்ஷி நிமித்தம்சத்திய விவஸ்தை’ என்று புகலப்பட்டிருக்கின்றது. அதனால் அவராற் பிரதி பாதிகப்பட்ட ஸ்ரீமத் ஸூத சம்ஹிதையை மூலமாகவுடைய பகவத் பாதாசாரிய சுவாமிகளது பாஷ்யமே பிரமாண மென்று முடிவாகாநின்றது.

அற்றேல்,ஜீவாநேகத் தன்மை, பிரபஞ்ச சத்திபத் தன்மை பரக்ஷேத்திரக்ஞ பேதாதி அபிமானத்தாற் கபில கணாத கௌதமமுனி முதலியோர்கட்கு மத்தியஸ்தத் தன்மையின்றென்று முன்னுரைத்து இப்பொழுது அவர்கட்கு, இன்றிய மத்தியஸ்தத்தன்மையை அங்கீகரித்து அந்த அநுவாத பலத்தால் இவ்வர்த்தமே ஸ்ரீ வியாஸ தாத்பர்ய விஷயமென்பது தன்வசநநாசமென்று கூறின், அற்றன்று; கபில கணாதாதிகட்குப்பேதாபேதங்களைச்சொல்லும் சுருதியர்த்தவிசாரத்தில் மத்தியஸ்தத் தன்மையில்லா விடினும் அவர்கட்கு வியாஸ மத அநுவாதஅதன்நிராகரண பூர்வகம் தன்மதஸ்தாபநத்தின் பொருட்டு ஸ்ரீ வியாச பகவானது சித்தாந்தமானது அவசியம் அறியப்பட்டிருத்தலின், அவர்களது சித்தாந்தத்தில் தனது பக்ஷத்தன்மை யபிமான மின்றி யிருத்தலினானும், ஸ்ரீமான் வியாஸபகவானது தாத்பர்ய விஷய ரூப மான அர்த்த விசாரத்தில் மத்தியஸ்தத் தன்மை சம்பவித்தலின், தன் வசந நாசமென்னுஞ் சங்கைக்கே யிடனின்று.

இக்கிரந்தத்தில் கபிலாதி அநுவாதரூப யுக்தி பலத்தால் இவ்வர்த்தமே வியாஸ தாத்பர்ய விஷயமென்று நிச்சயம் சம்பவிக்கின் எவரது பாஷ்யக்கிரந்தமுதலியவற்றிலும் பிரவிர்த்தி யுண்டாகா தென்று உரை

யற்க. "அந்த ஔபநிஷத் புருஷனைக் கேட்கின்றேன்" "அவேத வித்து அந்தப் பெரியதை மனனம் பண்ணுவதில்லை" என்பன முதலிய சுருதியால் ஷட்வித தாத்பர்ய லிங்காதியோடுகூடிய சுருதி பலத்தானேயே பரதத்துவ நிர்ணயமானது கர்த்தவ்யமென்னும் அர்த்தம் ஸ்ரீ வியாஸ பகவானது தாத்பர்ய விஷயமாகலின், அவ்வவ் வர்த்தத்தைப் பிரதிபாதிக்கும் அவ் வப் பாஷ்யக் கிரந்த பர்யாலோசனையானே அந் நிர்ணயத்திற்குக் கர்த்தவ்யத் தன்மையிருக்கின், அதில் பகவத்பாத பாஷ்ய ரிதியால் அந்நிர்ணயம் யுக்தமா? அல்லது ஸ்ரீ கண்ட ராமாநுஜ மத்வாதி பாஷ்யாதிமுறையாலா? என்னும் விப்பிரதி பத்தி ரூபமான சம்சயம் பிராப்தமாகுங்கால், கபிலாதி அநுவாதத்தால் உபோத்பலித ஸ்ரீமத் பகவத் பாதாசாரிய சுவாமிகள் பாஷ்யத்திற் கூறிய உபக்கிரமோப சம்ஹாராதி ஷட்வித தாத்பர்ய லிங்காதி யோடு கூடிய சுருதி பலத்தானேயே அந் நிர்ணயமானது யுக்தம் என்று சகலருக்கும் பாஷ்யக்கிரந்தாதிகளில் பிரவிர்த்தி சம்பவிக் கின்றமையின். அதன்கண் எங்ஙனம் வேதாந்த சாஸ்திரத்தில் "ரசநா அநுபபத்தியினும் அநுமான மின்று" என்பனவாதி அதிகரணங்களில் ஸ்ரீமத் வியாஸபகவானுல் சாங்கியமத நிராகரணஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அதுபோன்றே சாங்கிய சாஸ்திரத்திலும் கபிலபகவானுல் வேதாந்தசாஸ்திராபிமதகேவலாத்வைதம்பேத ஔபாதிகத்தன்மை பிரபஞ்ச அநிர்வசநீயத்தன்மை முதலியவற்றின் அநுவாதபூர்வகமாக நிராகரணஞ்செய்யப்பட்டிருக்கின்றது. அங்ஙனமே காண்பிக்கப் படுகின்றது. சாங்கிய சாஸ்திரத்தின் முதலத்தியாயத்தில் "அன்று அவித்தையி

னின்றுங்கூட அவஸ்துவாற் பந்தம் பொருந்தாமை யின்"; "வஸ்துத்தன்மையிற் சித்தாந்த ஹானி;" "விஜாதீய துவைதப் பிராப்தியும்"; "விருத்தம் உபய ரூபமாயிருக்கின்"; "அன்று, அவ்விதப் பதார்த்தப் பிரதீதியின்மையின்"; அவ்விடத்திலேயே, "உபாதி பேதத்திலும் ஒன்றற்கு நாநாத்தன்மை பொருந்தும்; அம்பரத்திற்குக் கடாதிகளோ டொப்ப"; "உபாதி பேதத்தை யடைகின்றது, உபாதியை யுடையவன் பேதத்தை யடையான்"; "இங்ஙனம் ஏகத்தன்மை யான் எங்குமிருப்பதற்கு விருத்த தர்மாத்தியாசம் இயையாது"; "அந்நிய தர்மமாயினும் அன்று; ஆரோ பத்தான் அதன் சித்தி ஏகமாகலின்."; "அத்வைத சுருதிவிரோதமன்று;ஜாதிபரமாகலின்";"அறியப்படும் பந்தகாரணத்திற்குத் திருஷ்டியால் அச்சொரூபம்;" "அந்தன் திருஷ்டியானன்று, சக்ஷுவுடையவர்கட்கு உபலம்பமின்று'; "வாமதேவாதிகள் முக்தர்கள் அத் வைதமன்று";"அநாதியில் இப்பொழுது எக்காலுமின் மையின், மேலுமிங்ஙனம்"; "இப்பொழுதொப்ப எவ் விடத்து மத்தியந்த உச்சேதமின்று"; ஐந்தாவது அத் தியாயத்தில் "நிஸ்ஸங்கத்திற்கு அவித்தியா சக்தி சம் பந்தமின்று"; "அதன் சம்பந்தத்தில் அது சித்திக்கில் அந்நியோந்நிய ஆசிரயத்தன்மை"; "அன்று பீஜாங் குரமொப்ப ஸாதி சம்ஸார சுருதியான்"; "வித்தையி னின்று மன்னியத்தன்மையில் பிரஹ்ம பாதப் பிராப் தத்தான்"; "பாதமின்றியிருப்பின் நிஷ்பலம்"; "அவித் தை பாதிக்கில் ஜகத்திற்கு மிங்ஙனம்"; "அச்சொரூபத் தில் சாதித்தன்மை"; அதன்கண்ணேயே "அன்று; அநிர்வசநீயத்திற்கு அஃதின்மையின்"; அவ்வுழியே "அத்வைதமன்று; ஆத்மாவினது இலிங்கத்தான், அப்

பேதப்பிரதிதியான்"; "நாநாரூபத்தானும் பிரத்தியக்ஷ பாதத்தான்"; "இரண்டுகளானன்று; அதனுனே"; "அவிவேகிக்கு அந்நியபரத்தன்மை அதன்கண்";"ஆத்மா அவித்தையன்று; இரண்டும் ஜகதுபாதானகாரணமன்று;நிஸ்ஸங்கத்தான்";"அன்று ஒன்றற்குஅநந்தசித்ரூபத்தன்மையில் இரண்டற்குப் பேதமாகலின்"; அவ்வழியே "ஆநந்தம் வெளிப்படுதல் முக்தியன்று; நிர்த்தர்மமாகலின்"; அருவ தத்தியாயத்தில் "உபாதியிருக்கில் அது சித்திக்கில் மீண்டு த்வைதம்"; "இரண்டானும் பிரமாண விரோதம்"; "இரண்டானும் விரோதமின்மையின், பூர்வோத்தரமுமன்று, சாதகமின்மையின்"; "பிரகாசத்தாலது சித்திக்கிற்கர்மகர்த்திருவிரோதம்"; "ஜட வியாவிருத்தம் ஜடத்தைச் சித்ரூபம் பிரகாசஞ்செய்கிறது";"சுருதி விரோதமன்று; ராகமுடையவர்கட்குவைராக்கியத்தின்பொருட்டு அது சித்தித்தலின்"; "ஜகத் சத்தியத்தன்மை துஷ்டகாரண ஜன்யமன்மையின் பாதக மின்மையின்" இப் பரமத நிராகரணர்த்தத்தையுடைய கபில சூத்திரங்களில், கேவலாத்வைதத்திற்கு மிகவெளிப்படையாகப் பிரதீதியாகலான், அவ்வித வாதி ஆகாங்க்ஷையில் வியாஸ சூத்திரங்களில் பரஸ்பரம் விருத்தார்த்தப் பிரதிபாதக நாநா பாஷ்யங்களிற் பிரவேசிப்பவனுக்குச் சம்சயமுண்டாகி அதனை நிர்யணஞ்செய்யு மாகாங்க்ஷையு மிருக்குமாயின் பதஞ்சலி ஜைமினி கௌதம கணுதாதி சூத்திரக்காரர்கட்கும் பாசுபதாதி தாந்திரிக மதப்பிரவிஷ்டர்கட்கும் சார்வாகாதி பாஹ்யமதப் பிரவிஷ்டர்கட்கும் அத்வைதம் அங்கிகாரமின்மையின்,வாதித்தன்மைச்சம்பவமின்மையாற், பாரிசேஷிகப் பிரமாணத்தானும் வேறு பிரகாரத்தால் அதன்நிர்ணய ஆகாங்க்ஷையின் நிவர்

த்தி பொருந்தாமையானும் ஸ்ரீமத் வியாஸபகவானே வாதியாக முடிவாகாநின்றது. வியாஸமஹரிஷியன்றி வேறு பிரசித்தமின்றிய யாராவதொரு அந்நியருக்கு வாதித்தன்மை யங்கீகரித்த வழி, வேறு வாதி அங்கீகரித்த கேவலாத்வைதத்திற்கு ஸ்ரீ வியாஸபகவானது தாத்பர்ய விஷயமல்லாதிருக்கினும், பட்டபாஸ்கர யாதவப்பிரகாச ஸ்ரீகண்ட ராமாநுஜ மத்வாதி பாஷ்யக்காரரங்கீகரித்த அர்த்தத்தினது மத்தியில் இவ்வர்த்தமே வியாஸதாத்பர்ய விஷயமென்று யாவராலும் நிர்ணயித்தற்குச் சாமர்த்திய மின்மையின், துவைதவாதிகட்குத் தமது பக்ஷ ஸ்தாபன மின்றியதோடுகூட வைதண்டிகத்தன்மைத்தூஷணம் பிராப்தமாகும். ஆகலின், அவ்விரண்டு ஆகாங்ஷையுஞ் சாந்த மாகுதற்பொருட்டு ஸ்ரீ வியாசபகவானே வாதியென்று இச்சையின்றியவனாலும் அங்கீகரிக்கப்படவேண்டும். இவ்வர்த்தமே மத்ஸரமின்றித் தடஸ்தரா யிருப்பவர்களின் இருதயத்திற் செல்லும்.

இதில் கபிலசூத்திர சம்பந்த கேவலாத்வைத அநுவாத பிரஹ்மாஸ்திரப் பிரதிக்கிரியையைச் செய்ய அசமர்த்தர்களாயும் பரம்பராப் பிராப்த பேத வாசனையாற் கலங்கிய அந்தக்கரணத்தை யுடையவர்களாயும் தம் மதாபிமானத்தைப் பரித்தியாகஞ் செய்தற்காற்றலின்றியவர்களாயுமுள்ள சிற்சில பேதவாதிகள், தமது உத்பிரேக்ஷையாற் கற்பித்த யுக்தி ஆபாச ஊசிகளால் கேவலாத்வைத அநுவாதப் பிரஹ்மாஸ்திரத்தைப் பரிகாரஞ் செய்தற்கு இச்சிக்கின்றார்கள்.

அங்ஙனமே, சாங்கிய சாஸ்திர அநுஸாரத்தாற் கேவலாத்வைதம் வியாஸ தாத்பர்ய விஷயம்

என்னுமிது யுக்தமன்று; சாங்கிய சூத்திரங்களை அபியுக்தக் கிரந்தங்களில் ஓரிடத்தும் உதாஹரணம் கொடுக்காமையான், கபில சம்மதத்தன்மை நிச்சயம் பொருந்தாமையின் என்பது முதற் பக்ஷம்.

பிராசின அக்வைதக் கிரந்தங்களில் கபில சூத்திர வசநமானது கேவலாத்வைத சாதக யுக்தித்தன்மையான் உபந்நியாசஞ் செய்யப்படாமையின் என்பது இரண்டாவது பக்ஷம்.

பிராசின கபிலமஹரிஷியால் இக்கால வியாஸர் செய்த சூத்திர தாத்பர்ய விஷய அர்த்தத்தின தநுவாதம் பொருந்தாமையின் என்பது மூன்றுவது பக்ஷம்.

உதாகரித்த சூத்திரங்களில்ஓரிடத்திலும் வியாஸ சப்தப்பிரயோக மின்மையின் "வியாஸமதத்தை அநுவாதஞ்செய்து" என்னுமிவ்வர்த்தமானது ககனாரவிந்தத்திற்குச் சமானமாகலின் என்பது நான்காவது பக்ஷம்.

சாங்கியசூத்திராநுவாதார்த்த கேவலாத்வைதாதிக்கு வேதாந்த சூத்திரங்களில் எங்கும் பிரதீதியின்மையாற் பிரத்தியபிஞ்ஞை யின்மையின் என்பது ஐந்தாவது பக்ஷம்.

எக்கால் கபிலருக்கு வியாஸமத நிராகரணம் அவசியம் செய்யத்தக்கதாமோ அக்கால் "ஈஸ்வர ஸித்தியின்மையின்" என்பதாதி சூத்திரங்களில் வியாஸரங்கிகரித்த ஜகத்காரணரூபமான ஈஸ்வராதி நிராகரண மாத்திரத்தாற் சரிதார்த்த மாகலின், கேவலாத்வைத அநுவாத சூத்திரங்கட்கும் வியாஸ ரங்கிகாரார்த்த அநுவாத பரத்துவமே கற்பிக்கவேண்டும் என்னும் நிர்ப்பந்தமின்மையின் என்பது ஆறுவது பக்ஷம்.

கேவலாத்வைதவாதிகளொருவரு மில்லா விடினும் சாங்கிய சூத்திரங்களில் தன்மத ஸ்தாபனத்தின் பொருட்டுத் தன்னால் உத்பிரேக்ஷித்த பக்ஷத்தன்மையான் அத்வைதத்தை அநுவாதஞ் செய்துகொண்டு அதன் நிராகரணஞ் சம்பவித்தலின் என்பது ஏழாவது பக்ஷம்.

அக்காலத்திலுள்ள யாராவதொரு கேவலாத்வைத வாதிகளினது மதத்தை அநுவாதஞ் செய்துகொண்டு அதன் நிராகரணம் சம்பவித்தலின் என்பது எட்டாவது பக்ஷம்.

சூதசம்ஹிதை, விஷ்ணுபுராணாதிகளிற் பிரசித்த கேவலாத்வைத வாதிகளாய சூத ஜடபாதாதிகளினது மதநிராகரணம் சம்பவித்தலின் என்பது ஒன்பதாவது பக்ஷம்.

வியாஸ சூத்திரங்களில் "அதன் அந்நியத்தன்மை ஆரம்பண சப்தாதிகளால்" என்பதாதியால் அவிசாரப் பிராப்த அத்வைத வாத அநுவாதம் பொருந்துதலின் என்பது பத்தாவது பக்ஷம்.

"ஆத்மாவென்று செல்லுகின்றார்கள், கிரகிக்கின்றார்கள்" என்பதாதி சூத்திராநுஸாரத்தால் கேவலாத்வைதமே வியாஸ தாத்பர்ய விஷயமென்று பிராந்தியையுடைய கபிலரால் அவ்வநுவாதம் பொருந்துதலின் என்பது பதினோராவது பக்ஷம்.

சர்வக்ஞராகிய கபிலரால் மேலுண்டாகும் ஸ்ரீ சங்கராசார்யர் அங்கீகரிக்குங் கேவலாத்வைதாதியின் அநுவாதஞ் செய்தற்கு ஆற்றலுடைமையின் என்பது பன்னிரண்டாவது பக்ஷம்.

வேதாந்தி யேகதேசியாகிய ஆஸ்மரத்திய ஔடு லோமி காசகிருத்ஸ்ந பாதரிகளினது மத்தியில் யாராவ தொருவரது மதத்தை அநுவாதஞ் செய்து அதன் நிராகரணஞ் சம்பவித்தலின் என்பது பதின் மூன்றுவது பக்ஷம்.

ஆகலின், உதாஹரித்த சூத்திரங்களில் கேவ லாத்வைத அநுவாதாதிக்கு வேறு வழித்தாகப் பொருந்துதலின் "வியாஸரே வாதித் தன்மை யான் முடிவாகிறது" என்னும் வசநமானது அயு க்தமாகலின், கேவலாத்வைதமே ஸ்ரீவியாஸ தாத்பர்ய விஷயமென்னும் இந்த உத்கோஷமானது பித்திகை யின்றிய சித்திரத்திற்குச் சமானமென்று (சங்கிக்கின் றனர்).

இவ்விடத்திற் கூறப்படுகிறது. சாங்கிய சூத்திரங் களை அபியுக்த கிரந்தங்களில் ஓரிடத்தும் உதாகர ணஞ் செய்யாமையின் கபிலசம்மதத் தன்மை நிச் சயம் பொருந்தாதென் றுரைக்கப்பட்டது பொரு த்தமின்று; ஸ்ரீமத் சூதசம்ஹிதை வியாக்கியான மான தாத்பர்ய தீபிகையில், இதனுனே சாங்கியர் களாற் கூறப்படுகின்றது; "சத்துவ ரஜஸ் தமசுக்களி னது சாமியாவஸ்தை பிரகிருதி" என்பதாதியால் வித் தியாரண்ணிய குருசரணர்களாலும், பரிமளக்கிரந்தத் தில் "அநமாந யோக்கியமும் ஒருவருக்கு" என்னு மதிகரணத்திலும் இதனுனே "ஸ்தூலத்தினின்றும் பஞ்சதன் மாத்திரைக்கு" என்பதுமுதல் "சம்ஹத பரார்த்தமாகலின் புருஷனுக்கு" என்பது பரியந்த மான கபில சூத்திரங்கள் என்பன வாதியால், அப் பய்ய தீக்ஷித சரணர்களாலும், புருஷார்த்த ரத்நாகரத் தில், "சாங்கியர்களால் மோக்ஷமோ லக்ஷிக்கப்படு

கிறது"; "அநந்தரம் மூன்றுவிததுக்க அத்தியந்த நிவிர்த்தி அத்தியந்த புருஷார்த்தம்" என்பன வாதியாற் பாலகிருஷ்ணாநந்த சரணர்களாலும், கபிலசூத்திரங்கள் உதாகரிக்கப்பட் டிருத்தலின்.

கூறியரீதியால் கபிலசூத்திர மிருக்கினும் நீ உதாஹரித்த கேவலாத்வைத அநுவாத சூத்திரங்கட்குக் கபில சம்மத சித்தியின்று என்றுகூறற்க; கபில சூத்திரங்கட்கு வியாக்கியானஞ் செய்த அநிருத்தாசாரியர்களாலே "அநந்தரம் மூன்றுவிதத் துக்க அத்தியந்த நிவிருத்தி அத்தியந்த புருஷார்த்தம்" எனவாரம்பித்து "எதுவோ அதுவோ அதன் நாசம் புருஷார்த்தம்" என்பதுபரியந்தமுள்ள சர்வ சூத்திரங்களும்வியாக்கியானிக்கப்பட்டிருத்தலின், அதன் மத்தியில் அமிழ்ந்திருக்கும் உதாகரித்த சூத்திரங்களைக் கபில ரியற்றியதில் விவாதமின்மையின்.

இரண்டாவது பக்ஷமும் விசாரிக்கில் ஆற்றலின்று; நம் பாஷ்யாதி பிராசீன கிரந்தங்களில் கௌதம கபிலாதி சூத்திரக்காரர்கட்கே பிரதிவாதித் தன்மையானிலக்ஷிக்கப்படுதலின், அம்மதநிராகரணப் பிரவிருத்த பாஷ்யக்காராதியர் நவீன பேதவாதி நிராகரணார்த்த கபில அநுவாத யுக்தி பரியந்தம் செல்ல லபேக்ஷிக்காமையானும், அப்பய்ய தீக்ஷித சரணாதி கிரந்தக்காரர்கட்கோ தமது சமான யுக்திப் பிரமாணோபந்யாச சமர்த்த பேதவாதி சம்பவமின்மையானே கபில சூத்திர அநுவாதரூபப் பிரபல யுக்தியை அபேக்ஷிக்காமலே பரமத நிராகரணஞ் சம்பவித்தலானும், பிராசீன கிரந்தங்களில் உதாகரணஞ் செய்யாமை மாத்திரத்தாற் சாங்கியாநுவாதத்திற்குக் கேவலாத்வைத சாதக யுக்தித்தன்மை சம்பவிக்காது என்னுமிது மூர்க்கப் பிரலாப மாகலானுமென்க.

மூன்றாவதும் மனத்தாலறியத் தக்கதன்று; ஒவ்வொரு கற்பத்திலும் லோகாநுக்கிரகார்த்தம் அவதரிக்கும் ஸ்ரீ வியாஸ கபிலாதிகட்கு முன் பின்னென்னும் விபாகமின்மையின், தன்தன் மதஸ்தாபனத்தின் பொருட்டுப் பரஸ்பரம் அங்கிகரித்த அர்த்தத்தின் அநுவாதம் பொருந்துதலின்.

நான்காவது பக்ஷமும் அசங்கதம்; கபில சூத்திரங்களில் கேவலாத்வைத நிராகரண ஸ்தலத்தில் வேறு வாதியின்மையான் ஸ்ரீ வியாஸபகவானே கேவலாத்வைத வாதியென்றுணர்தற்குச் சமர்த்தமாகலின் அதில் ஸ்ரீ வியாஸ சப்தப் பிரயோகமும் இருக்கவேண்டும் என்பதில் நியாமகமின்மையின். அன்றியினே, "ஈக்ஷித்தலின் அசப்தமன்று" என்பது முதலிய வேதாந்த சூத்திரங்களில் சாங்கியமத நிராகரணத்தின் கண்ணும் கபில சப்தப் பிரயோகம் பிராப்தமாகு மாகலான்.

இதனானே ஐந்தாவதும் ஒன்றுஞ் செப்பத் தக்க தன்று; கபில சூத்திரசம்பந்த கேவலாத்வைத வாதி அங்கிகரித்த அர்த்த அநுவாத பலத்தானே அத்வைதம் ஸ்ரீ வியாஸ தாத்பர்ய விஷயமென்னும் நிச்சயஞ் சம்பவிக்குமிடத்து வேதாந்த சூத்திரங்களில் அப் பிரத்தியபிஞ்ஞைக்குஅபேக்ஷையின்மையின் பிரத்திய பிஞ்ஞையில்லாவிடத்து அத்வைதமே ஸ்ரீ வியாஸ தாத்பர்ய விஷயமென்று எங்ஙனம் நிச்சயஞ் செய்யப் படுகின்றது என்று பகரில், பிராந்தனாயிருக்கின்றாய்; அந்நிய அத்வைத வாதியின்மையானே ஸ்ரீவியாஸரே அத்வைதவாதியென்றுபுகன்றமையின்; எப்போழ்து வேதாந்த சூத்திரங்களில் மிக வெளிப்படையாய் அத்வைதாதியையே பிரத்தியபிஞ்ஞை செப்பப் படுகிறதோ,

அப்போழ்து உனது பாஷ்யாதிக் கிரந்தாரம்பம் சம்ப விக்காமையின், உனது புத்தியால் நன்கு கற்பித்த விருத்த சங்கையின் அங்குரோத்பத்திக் கவகாசமின்று. பிரஹ்ம சூத்திரங்களில் பேத ஔபாதிகத் தன்மை முதலிய அம்சத்தில் பிரத்தியபிஞ்ஞை யிருக்கிறது. "உபாதி சம்பந்தத்திலும் ஒன்றற்கு நாநாசம்பந்தம் பொருந்தும்; ஆகாசத்திற்குக் கடாதிகளோடொப்ப" என்பன வாதி கபில சூத்திரங்களால் அநுவதிக்கப்பட்ட ஔபாதிக பேதத்திற்கு "இதனுனே உவமை சூரியாதி போல்" ; "ஆபாசனே" என்பன முதலிய சூத்திரங்களில் பிரதீதியாகலானும், "ஆத்மா அவித்தை யன்று; அவ்விரண்டுஞ் ஜகத்திற் குபாதானகாரணமன்று ; நிஸ்ஸங்கமாகலின்" என்னுங் கபிலசூத்திரத்தான் நிராகரித்த பிரஹ்ம ஜகதுபாதானத் தன்மை "இந்த ஜகத்திற்கு ஜன்மாதி யெதனி னின்றும்"; "பிரகிருதியும் பிரதிஞ்ஞை திருஷ்டாந்த அநுபரோதத்தான்" என்னுஞ் சூத்திரமிரண்டிற் பிரதீதியாகலானும்.

அற்றேல், இச்சூத்திரத்தான் நிராகரித்த பிரகிருதி விசிஷ்ட ப்ரஹ்ம சம்பந்த ஜகதுபாதானத் தன்மைக்கு ஸ்ரீகண்ட ராமாநுஜாதி மத சாதாரணத் தன்மையாற் கேவலாத்வைத வாதி அங்கிகார ஜகத் உபாதானத் தன்மைக்கே எங்ஙனம் இப்பிரதிஞ்ஞை என்று செப்பிற், செப்புவாம். அச்சூத்திரத்தில் கேவலம் ஆத்மா ஜகதுபாதானமா? அல்லது அவித்தையா? அல்லது அவித்தியா விசிஷ்ட ஆத்மாவா? என்று மூன்று பிரகாரமாக விகற்பித்து அதன் நிராகரணப் பிரஸ்தாவத்தில் அவித்தை ஜகத் உபதான காரணத்தன்மை நிராகரண பக்ஷத்தில் அவஸ்துரூப அவித்தைபே அவித்தியா சப்

தார்த்தமென்று உரைக்கவேண்டும்; இல்லாவிடின், ராமாநுஜாதி அங்கிகரித்த நித்தியப் ப்ராகிருதி பரத்துவத்தில் சாங்கியர்களாலும், அவ்வித ப்ரகிருதிக்கே ஜகதுபாதானத்தன்மை அங்கிகரித்தலால், அதன் நிராகரணத்தில் தன் சித்தாந்த நாசப்பிரசங்கத்தாலும், "அன்று அவித்தையினின்றும் அவஸ்துவாற் பந்தம் பொருந்தாமையின்" என்னும் முதலத்தியாய சூத்திர சம்பந்த அவித்திபாசப்தத்திற்கு அவஸ்துரூப அவித்தியா பரத்தால் நிர்ணயஞ் செய்யப்படுதலின், அதன் பிரத்தியபிஞ்ஞைபால் இச்சூத்திர சம்பந்த அவித்யா சப்தத்திற்கும் அவஸ்துரூப அவித்யாபரத்தன்மை உசிதமாகலாலும். ஆகவே, அவஸ்து ரூப அவித்யாவிசிஷ்ட ப்ரஹ்ம சம்பந்த ஜகதுபதானத்தன்மை நிராகரணத்தையே இவ்விடத்திற் பகரவேண்டுதலான், அந்த ஜகதுபாதானத்தன்மைக்கும் ராமாநுஜாதி மதசாதாரணத் தன்மையின்மையின் கேவலாத்வைதவாதி அங்கிகரித்த ஜகதுபாதானத் தன்மைக்கே முற்புகன்ற வேதாந்த சூத்திரமிரண்டிலும் பிரத்திபபிஞ்ஞையில் விவாதமின்று என்பது கருத்து.

ஆறுவது பக்ஷமும் சிரேஷ்டமன்று; "ஈஸ்வரசித்தியின்மையின்" என்பதாதி கபில சூத்திரங்களான் நிராகரிக்கப்பட்ட ஈஸ்வராதிகட்குக் கௌதமாதி மத சாதாரணத்தன்மையால் அவர்களினது சூத்திரங்கட்கு வியாஸமதமாத்திர நிராகரண பரத்தன்மை சம்பவமின்மையாலும், அச்சூத்திரங்கள் நையாயிகர் அங்கிகார மாத்திரத்தை நிராகரிக்கும் பரமாகலாலும். இதனானே அநிருத்த விருத்தியில் நையாயிகர் அங்கிகார கண்டன அபிப்பிராயத்தானேயே "ஈஸ்வர சித்தி யின்மையின்"

என்பதாதி சூத்திரங்கள் வியாக்கியானஞ் செய்யப் பட்டன. கேவலாத்வைத அநுவாதபரமான 'அநேக கபிலசூத்திரங்களில் வேறுவாதியின்மையானும், அசாதாரணத்தா னவசியஞ் செய்யத்தக்க வியாஸமத நிராகரணஞ்சம்பவிக்கில்,வேறுமத சாதாரணார்த்த நிராகரணபரமான "ஈஸ்வர சித்தியின்மையின்" என்பதாதி சூத்திரங்களானேயே வியாஸமத நிராகரண சரிதார்த்தத் தன்மைக் கற்பனம் யுக்தமின்மையானும்.

ஏழாவது பக்ஷமு மன்று; "வஸ்துத் தன்மையிற் சித்தாந்த ஹானி" என்னுஞ் சூத்திரத்திற் சில வாதிகளினது சித்தாந்தம் சித்தித்தது போன்று கொண்டே அம்மதத்தினது நிராகரணம் பிரதீதியாகலின், உத்பிரேக்ஷித்த பக்ஷத்தைக் கொண் டந்நிராகரணம் பொருந்தாமையின்.

எட்டாவதுந் துஷ்டமே; அக்கா லுள்ளவர்களைக் கேவலாத்வைத வாதியென்றறைறயில், அவர் மஹரிஷியா ? அல்லது அந்நியரா ? ஆதியதன்று; எக்கால் மஹரிஷி அக்கால் கபில கணாதாதி மதம் போன்று அவரது மதமும் குரு சிஷ்ய பரம்பரையா லெங்கும் விளக்கம் அவசியத்தன்மையான் ; நஷ்டத்தன்மை பொருந்தாமையின். இறுதியதன்று; அந்நிய கேவலாத்வைத வாதிபராய சில அப்பிரசித்தர் இருக்கின்றனர் என்னுமிதில் பிரமாண மின்மையானும், பிரசித்தமான வியாஸ மஹரிஷியைப் பரித்தியாகஞ் செய்து அப்பிரசித்த அத்வைத வாதியைத் தேடுதல் அசம்பவ மாகலானும்.

ஒன்பதாவது பக்ஷமும் வியர்த்தமே; சூத ஜடபரதாதிகட்குச் சுதந்திரத்தன்மையான் சாஸ்திரப் பிரவர்த்தக மின்மையிற் சாங்கிய தந்திரப் பிரவர்த்தக கபில

பிரதிவாதித்தன்மை அசம்பவமாகலின், அம்மத நிரா கரணம் பொருந்தாமையின். மற்றும், அவர்கட்கு வாதித் தன்மை அங்கிகரிக்கின், ஸ்ரீமத் சூதசம்ஹிதை விஷ்ணு புராணாதிகட்கு உன்னாலேயே கேவலாத்வைத பரத் தன்மை சாதிக்க வேண்டுமாகலின், அதன் சமா னார்த்தத்தையுடைய வேதாந்தங்கட்கும் கேவலாத் வைத பரத்தன்மை சித்தித்தலான், நமதிஷ்டம் சித் தித்தமையின். புகன்றரிதிபாற் கேவலாத்வைதத்தைப் பிரதிபாதிக்கும் விஷ்ணு புராணாதிகட்குப் பேத பரத் தன்மை வியவஸ்தாபகர்களான உனது பாஷ்யக்காரர் முதலியோர்கட்கு உன்னானேயே பிராந்தி கற்பித் தலின் உனதனிஷ்டப் பிரசங்கமும் வரும்.

பத்தாவது பக்ஷமும் விஷமம்; விகற்பசஹநம் இல் லாமையின். அவிசாரத்தாலுரைத்த கேவலாத்வைத நிராகரணம் அங்கிகரிக்கின், அநுவதித்த கேவலாத் வைதம் வியாஸருக்குப் பூர்வபக்ஷமென் றறையப்படு கின்றதா? அல்லது சித்தாந்தமென் றறையப்படுகின் றதா? முதலதன்று; "வஸ்துத்தன்மையிற் சித்தாந்த ஹானி" என்பது வியாஸரைக்குறித்துக் கபிலதூஷணம் பொருத்தமின்மை யாகலானும், வியாஸ சித்தாந்தத் தை நிராகரித்தற் பொருட்டுப் பிரவர்த்தித்த கபிலரால் அவரது பூர்வபக்ஷ நிராகரணம் பொருந்தாமையானும். இ.றுதிபதில் இஷ்டப்பிராப்தி.

பதினோன்றாவது பக்ஷமுமன்று; தன் மத ஸ்தாபன த்தின்பொருட்டு அந்நியமத நிராகரணப் பிரஸ்தாவத் தில், சகல சாஸ்திர சித்தாந்தார்த்தத்தை நிர்ணயஞ் செய்தற்கு விழித்திருக்கும், சர்வஞ்ஞராயும், அந்நிய மத அநுவாதஅம்சத்திற் பிராந்தியின்றியவராயு முள்ள

கபிலருக்கு, வியாஸமத அநுவாத அம்சமாத்திரத்திற் பிராந்திக்கற்பனம் பிராந்திகாரணமாகவிருத்தலின்.

பன்னிரண்டாவது பக்ஷமுமன்று; கௌதம கணாதி சூத்திரக்கார மத நிராகரண அநேக பாட அநுரோதத் தான் வியாஸ மத நிராகரணத்திற்கேயே உசிதமாகலின்; அதற்குப் பாஷ்யஞ் செய்த மேலுத்பத்தியாகும் சங்கராசாரியரது மதநிராகரணம் அசங்கதமாகலின். கொள்ளாக்கால், ராமாநுஜ மத்வ ஸ்ரீகண்டாதி பாஷ்ய மியற்றியோரது மதங்கட்கும் நிராகரணஞ்செய்யும் பிரசங்கம் வரும். சாங்கிய சூத்திரங்களில் ராமாநுஜாதி பாஷ்யக்கார ரங்கீகரித்த விசிஷ்டாத்வைதாதி நிராகரணம் ஒரிடத்தும் தோற்றரவேயின்று. அல்லது, உண்டாகும் சங்கராசார்யரது பக்ஷநிராகரணம் இருக்குக. அங்ஙனமாயினும், பொருத்த மின்மையின்று. வியாஸ தாத்பர்ய நிர்ணய இதம்பரியத்தாற் பிரவிர்த்தித்த பாஷ்யக்காரர்களினது மத்தியில் விசேஷமாகப் பகவத்பாத பக்ஷமே லக்ஷியஞ்செய்து நிராகரணம் பார்க்கப்படுதலான், அவராங்கீகரித்த கேவலாத்வைதமே வியாஸ தாத்பர்ய விஷயமாமென்று நிச்சயிக்கப்படுகின்றதென நமக்கு நன்றாகச் சித்தித்தது.

வேதாந்த ஏகதேசிகளாய ஆஶ்மரத்ய ஔடுலோமி காஸகிருத்ஸ்ந பாதரிகளினது மத்தியில் யாராவதொருவரது மதத்தை அநுவதித்து அதன் நிராகரணஞ் சம்பவித்தலின் என்னும் பதின்மூன்றாவது பக்ஷமுமன்று; சுவதந்திர சாஸ்திரப் பிரவர்த்தக கௌதம கணாதி மத நிராகரண அநேக பாடத்திற் பிரதானமல்ல நிபர்ஹண (பிரதான மல்லனைச் செயித்தல்) நியாயத்தால், வேதாந்த தந்திரப் பிரவர்த்தக வியாஸ மதமே

நிராகரணஞ் செய்தலுசிதமாகலின், அதன் ஏகதேசிரூப ஆஸ்மரத்தி யாதி மத நிராகரணம் நியாயமன்றாகலின். அல்லாக்கால், "அசப்தம் அன்று ஈக்ஷித்தலின்" என்பதாதி சூத்திரங்களில் சாங்கியமத நிராகரண ஸ்தலத்திலும் அதன் ஏகதேசரூப பஞ்சசிக சநந்தனுசாரி யாதி மதங்கட்கே நிராகரணஞ் செய்த லுசிதமாமென்பது பிராப்தமாகலின். இஷ்டப்பிராப்தமாமெனக்கொள்ளற்க; சகலபாஷ்யங்களிலும் கபில மதமே லக்ஷியஞ் செய்து அம்மத நிராகரணம் பார்க்கப்படுதலின், அதன் விரோதம் பிராப்தமாமாகலின். எவ்வயின் கபிலர் புகன்ற கேவலாத்வைத மத நிராகரணபர சகல சூத்திரங்கட்கும் வேதாந்தஏகதேசரூபஆஸ்மரத்தியாதி மத நிராகரண பரத்தன்மை; அவ்வயின் அவ்விடத்து வியாஸ மத நிராகரண மின்மையின், "எதுவரை அந்நியமதம் நிராகரிக்கப்படவில்லையோ, அதுவரைத் தன்மதம் ஸ்தாபிக்கப்படாத தாகின்றது" என்னும் நியாயத்தாற் கபிலருக்குத் தமது சித்தாந்த அசித்திப் பிரசங்கம்(வரும்). மற்றும், ஆஸ்மரத்தியாதிகளினது மத்தியில் எவரது மதம் நிராகரணமியற்றப்படுகின்றது? ஆஸ்மரத்தியரது மதம் நிராகரிக்கப்படவில்லை; "வாக்கிய அந்நுவயத்தான்" என்னு மதிகரணத்தின்கண் பகவத்பாத ஸ்ரீகண்ட ராமாநுஜ பாஷ்யங்களில் "பிரதிஞ்ஞா சித்தியான் லிங்கம் ஆஸ்மரத்தியர்" என்னும் சூத்திர வியாக்கியானத்தில் ஜீவப் பிரஹ்மங்கட்குக் காரிய காரண பாவத்தாலுண்டாக்கிய ஸ்வாபாவிக பேதா பேதமே ஆஸ்மரத்தியர தங்கீகார மெனப்பிரதிபாதித்தலான்; சுருதப்பிரகாசிகையில் இதுயாதவபக்ஷம், இச்சூத்திரத்தில் கூறப்பட்டது. அவ்விடத்தேயே "காரிய ரூபத்தானும் காரண ரூபத்தானும் ஜீவப் பிரஹ்மங்களினது பேதாபேதங்

கள் சுவாபாவிகங்கள் சம்மதங்கள்" என்பதாதியால் அவரங்கீகரித்த ஸ்வாபாவிக பேதா பேதத்தை ஸ்பஷ்டமாகப் பிரதிபாதித்தலானும், அவ்வித ஸ்வாபாவிக பேதாபேத வாதியைக் குறித்து "உபாதிசம்பந்தத்திலும் ஒன்றற்கு நாநாத் தன்மை பொருந்தும், எங்ஙனம் கடாதிகளா லப்பரத்திற்கே போல" என்பனவாதியால் ஔபாதிக ஜீவ பேதத்தை யநுவதித்து "இங்ஙனம் ஏகத்தன்மையா னெங்கு மிருப்பதற்கு விருத்த தர்மாத்தியாச மின்று" என்பதாதியால் அதன் நிராகரணம் அநுசிதமாகலின். இதனுனே ஔடுலோமி மத நிராகரண பரம் இது என்பதும் நிராகரிக்கப்பட்டது. அவ்வதிகரணத்தின் கண்ணே "உயரக்கிளம்புகின்றது இங்ஙனம்பாவித்தலின் என ஔடுலோமி" என்னுஞ் சூத்திர சுவாரஸ்ய பரியாலோசனையான் முக்திக்குப் பூர்வம் சுவாபாவிக பேதம் முக்தியின் பின்னரும் சுவாபாவிக பேதம் ஔடுலோமி அங்கீகாரம் எனவிது பிரதிபாதித்தலான், அவரைக் குறித்து "இங்ஙனம் ஏகத்தன்மையான்—" இது முதலிய சூத்திரத்தி லுரைத்த உபாதிபேத நிராகரணத்திற் கவகாச மின்மையின். இவ்வர்த்தமும் பாஷ்யாதிக் கிரந்தங்களில் ஸ்பஷ்டம்; அவற்றுள், ராமாநுஜ பாஷ்யத்தில்—இந்த ஜீவாத்மாவினது உத்கிராந்திக்குப் பூர்வம் இங்ஙனம் பாவித்தல் ஸ்வாபாவிகமா? அல்லது ஔபாதிகமா? அவற்றுள்ளும், பாரமார்த்திகமா? அல்லது அபாரமார்த்திகமா? என்னுமிது முதலிய வற்றல் விகற்பித்து ஔடுலோமி மதம் நிராகரணஞ் செய்யப்பட் டிருக்கின்றது. சுருதப்பிரகாசிகையிலோ—சம்பாவித பக்ஷங்களின் மத்தியில் அந்நிய அங்கீகாரம் பரிசேஷித்தற் பொருட்டுச் சுவாபாவிக ஔபாதிக விகற்பஞ் செய்யப்பட்டது. சங்கர

பாஸ்கர ருரைத்தபக்ஷமிரண்டிற்கும் "உயரக்கிளம்பும்" என்னும் ஒரே சூத்திரத்தான் நிராகரணஞ் செய்யத் தக்கவிச்சையை அறிவிக்கற் பொருட்டுப் பாரமார்த்திக அபாரமார்த்திக விகற்பஞ் செய்யப்பட்டதென்ப தாதியால் ஔபாதிக பேதமிரண்டும் பகவத்பாத பட்ட பாஸ்கர அங்கிகாரம் என ஸ்தாபித்தலாற், பரிசேஷத்தான் ஸ்வாபாவிக பேதமே ஔடுலோமி சித்தாந்தமாமென அப்பாஷ்யத்திற்குத் தாத்பர்யம் ஸ்பஷ்டமாகின்றது. இதனனே, நமது பகவத்பாத பாஷ்யத்திலும்—ஔடுலோமி பக்ஷத்தில் ஸ்பஷ்டமே, அவஸ்தாந்த ராபேக்ஷைகள் பேதாபேதங்கள் என்றுரைக்கப்பட்டது. வாசஸ்பத்தியத்திலும்—ஜீவனும் பரமாத்மாவோடு அத்தியந்தம் அபின்னனே. அவனே தேகேந்திரிய மனோபுத்தியாதி உபாதி சம்பந்தத்தாற் சர்வதா கலங்கியவன்; ஞான தியானாதி சாதன சம்பந்நனை அவனுக்குத் தேகேந்திரிய சமூகத்தினின்றும் உயரக்கிளம்பிப் பரமாத்மத்தன்மையான் ஐக்கியம்பொருந்துதலின் எனவும், கல்பதருகிரந்தத்திலும்—கலப்பிற் காரணம் உபாதி சம்பந்தம், ஜீவ பரபேத மன்று எனவும், பாஷ்ப வாசஸ்பத்திய கல்பதரு கிரந்த பரியாலோசனையாகிய விதனன் ஔடுலோமி மதத்தில் முக்திக்குப்பூர்வம்ஸ்வாபாவிகபேதம், அதன் பின்னர் அபேதமென ஸ்பஷ்டமாகா நின்றது. சிவார்க்கமணி தீபிகையிலும் சம்சார தசையில் ஜீவனுக்குப் பரமேஸ்வரனி னின்றும் பேதமாயினும் மோக்ஷ தசையில் அத்தன்மைப் பிராப்தியான் ஜீவசப்தங்களால் பரமேஸ்வர நாமமென ஔடுலோமி மத மென்று சூத்திரத்தை வியாக்கியானஞ் செய்து, உத்கிரமிஷ்யதே என்பதாதியால் அவஸ்தாபேதத்திற் சுவாபா

விக பேதாபேதமே ஔடுலோமி அங்கீகாரமெனப் பிரதி பாதித்திருக்கின்றது. ஆகலின் ஔடுலோமியைக் குறித் துக் கபிலர்புகன்ற தூஷணத்திற் கவகாசமின்று. காச கிருத்ஸ்நாது மதநிராகரணமு மன்று. அவற்றுள், ஸ்ரீ கண்ட ராமாநுஜபாஷ்ய ரீதியால் அம்மதம் அநுவாதஞ் செய்யப்படுகின்றதெனப் பகரற் பாற்றோ? அல்லது நமதுபகவத் பாதபாஷ்யரீதியாலா? ஆதியதன்று; அவ் வதிகரணத்தின்கண்ணே "அவஸ்திதியால் எனக் காச கிருத்ஸநன்" என்னுஞ் சூத்திரத்தில் ஸ்ரீகண்ட ராமா னுஜ பாஷ்யங்கள் காசகிருத்ஸநருக்கு அவர்க ளங்கீகரி த்த விசிஷ்டாத்வைதவாதித் தன்மையைப் பிரதிபாதித் தலான் அவரைக் குறித்து முற்புகன்ற கபிலதூஷண அவகாசமின்மையின். அது ஸ்ரீகண்டபாஷ்யத்தில், சர்வ சுருதிகளினது சமரச விசாரத்தில் சர்வசிதசித்வஸ்துக் கட்கு அந்தரியாமித் தன்மையா லனுப்பிரவிஷ்ட சர்வ சரீர சர்வசப்தவாச்சியப் பரமேஸ்வரன்சிவனென அறி யப்படுகின்றதென்று கூறப்பட்டிருக்கின்றது. அதனுற் காச கிருஸ்த்நமதமே சர்வசுருதி சூத்திர மஹா அபி யுக்த சம்மதம்என்றுணர்க. அங்ஙனமே, ராமாநுஜபாஷ் யத்திலும், தன்சரீரரூப ஜீவாத்மாவில் ஆத்மத் தன்மை யானிருத்தலின் ஜீவசப்தத்தாற் பிரஹ்மப்பிரதிபாதன மெனக் காசகிருத்ஸந ஆசாரியர் அங்கீகரித்தார். ஜீவ சப்தமும் ஜீவனுக்குப் பரமாத்ம பர்யந்தத்தினதே வாச கம்; ஜீவமாத்திரத்தினது எனப்புகல்வதன்று. அந்தமன் று; நம்பகவத்பாத பாஷ்யரீதியாற்காசகிருத்ஸநர் கேவ லாத்வைதவாதியே யாகலின் அவரைக்குறித்து முற்புக ன்ற கபிலதூஷணம் அவகாச முடையதே. அங்ஙனமா யினும், காசகிருக்ஸ்நாது மதமே வியாஸமதமெனச்சகல

பாஷ்யகார சம்மதமாகலான் அம்மத நிராகரணத்தின் கண் வியாஸமதமே நிராகரித்த தன்மை சித்தித்தலின் வியாஸர் கேவலாத்வைதவாதி யென நமக்கு நன்றாகச் சித்தித்தது. மத்வ பாஷ்யத்திலோ கிருஷ்ண த்வைபாயன மதத்தினின்றும் ஏகதேசஞ்ஞர்களாகிய அந்நியர் கள் எங்ஙனம் புத்தியோ அங்ஙனம் புகல்கின்றனர் விரோதமின்று என்பதாதியால் ஆஸ்மரத்திய ஔடு லோமி காசகிருத்ஸ்நர்கட்குப் பேதவாதித் தன்மை யங்கிகரித்தலின், கபிலருரைத்த தூஷணைப் பிராப்தியே யின்மையின் அவர்கட்கு வாதித்தன்மைக்கற்பனமின்று. வாதரி மத நிராகரணமு மன்று; பகவத்பாத ஸ்ரீ கண்ட ராமாநுஜ மத்வ பாஷ்யங்களில் "அபாவம் வாதரி புகன்றார், இங்ஙனம்" இச்சூத்திர வியாக்கியானத்தில் முக்தி தசையிற் றேகேந்திரியாதி அபாவமாத்திரத் திற்கே வாதரி அங்கிகார மெனலாற் கேவலாத் வைதத் தினது பிரதிபாதன மின்மையின். சரீரா பாவப் பிரதி பாதன மாத்திரத்தால் அபேதஞ் சித்திப்பதின்று; அங் ஙனமாயின், நையாயிகாதிகட்கும் முக்திதசையில் அவர் களினது கிரந்தங்களில் சரீராபாவம் பிரதிபாதித்தலின் ஜிவப்பிரஹ்மங்களினைக்கியம் அங்கிகரிக்க வேண்டிவரு மாகலின்; ஆகவே, அவரைக் குறித்துக் கபில ருரைத்த தூஷண மிலையாமையே யாம். ஆதலாற் கூறிய ரீதி யாற் கபில சூத்திரங்களிற் கேவலாத்வைதாதி அதி ஸ்புடமாகப் பிரதீதியாகலின் அவற்றிற்கு வேறுபிரகார மாச் செய்தற்குச் சக்தமின்றாகலானும், அவ்வித வேறு அத்வைத வாதியின்மையின் இக்கிரந்தத்தில் அல்லது வேறுசாஸ்திரங்களில் யாதாவதோரிடத்துப்பேதவாதி த்தன்மையால் வியாஸமஹரிஷியை அங்கிகரித்து அவர் அங்கீகரித்த பேதாநுவாத பூர்வகம் நிராகரண பர சூத்

திரங்களின்மையின், வியாஸசூத்திரங்களில் அசாதாரண மான மஹா பிரயத்தனத்தாற் கபிலரையே லக்ஷயஞ் செய்து அம்மதத்தை நிராகரித்தலான், அஃதொப்பக் கபிலசூத்திரங்களிலும் வியாஸரையே லக்ஷியஞ் செய்து அம்மத நிராகரணத் தன்மை அவசிய மாகலானும் வியாஸ மஹரிஷியே வாதித் தன்மையான் முடிவாகா நின்றனரென நன்றாக நவிலப்பட்டது.

அங்ஙனமே, அநிருத்தவிருத்தியிலும் முதலத்தியாயத்தில்—ஏக ஆத்மா என வேதாந்திகள் (கூறுகின்றனர்). ஆகவே, "நித்தியமாயும், சர்வகதமாயும் கூடஸ்தமாயும் தோஷ வர்ஜிதமாயும் ஏகமாயும் உள்ள ஆத்மா மாயையாகியபிராந்தியாற் பேதத்தையடைகின்றது, சுபாவத்தானன்று" என்பதாதியால் ஸ்ரீமத் சூதசம்ஹிதை வசநஉபஷ்டம்ப பூர்வகம் ஆத்ம ஐக்கியத் தன்மையை வேதாந்தி அங்கீகாரமெனப் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. அவ்விடத்தே ஐந்தா மத்தியாயத்தில்-சுக்திரஜதாதிகளில் அநிர்வசநீயத்தன்மையே வேதாந்தி அங்கீகாரம் என அறிவித்தற்பொருட்டு "அன்று அநிர்வசநீயம் அஃதின்மையின்" என்னுஞ்சூத்திர அவதாரிகையில் வேதாந்திமதம் தூஷிக்கப்படுகின்றதென் றுரைக்கப்பட் டிருக்கின்றது.

மற்றும், எங்ஙனம் வேதாந்த சாஸ்திரத்தின்கண் "மஹத் தீர்க்கமொப்ப அல்லது ஹ்ரஸ்வ பரிமண்டலங்களால்" என்னுமதிகரணத்தில் பகவான் வியாஸரால் கணாதமத நிராகரணஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அஃதொப்ப, வைசேஷிக சாஸ்திரத்தின் கண்ணும் பகவான் கணாதரால் வியாஸ ரங்கீகரித்த கேவலாத்வைதமே நிராகரணஞ் செய்யப்பட் டிருக்கின்றது. அங்

னமே, வைசேஷிக தந்திரத்தின்கண் மூன்றாவ தத்தி யாயம் இரண்டாவது அஃறிகிற்றனது சித்தாந்தத்தின் கண் ஆத்மாவுக்கு லிங்கத்தாலறியுந்தன்மையைப் பிரதி பாதித்து வேதாந்தி அங்கீகரித்த ஆத்மாவைக் கண்டிப்பான். "ஆகலின் ஆகமிகம்" என்னுஞ் சூத்திரத்தால் ஆகமமொன்றுன் நன்கறியும் ஆத்மாவை அநுவதித்து அவ்வாத்மாவிற்கே "சுகதுக்க ஞானோத்பத்தி விசேஷமின்மையின் ஏகாத்மத் தன்மை சர்வசரீரிகட்கும்" என்னுஞ் சூத்திரத்தால் அவ்வங்கீகார ஏகத்தன்மையையும் அநுவதித்து "நாநாத்மாக்கள் வியவஸ்தையான்", "சாஸ்திர சாமர்த்தியத்தானும்" என்னுஞ் சூத்திரமிரண்டானும் ஆத்மைகத்துவ நிராகரண பூர்வகம் ஆத்ம நாநாத் தன்மை வியவஸ்தாபிக்கப்பட்டது. இவ்வர்த்தம் அச்சூத்திர வியாக்கியானாதிகளில் ஸ்பஷ்டம். அஃதெங்ஙனம்—இங்ஙனம் செவ்வனே அறிந்த ஆத்மாவினது நாநாத்தன்மைஏகத்தன்மைச்சந்தேகத்திற் பூர்வபக்ஷங் கூறப்படுகின்றது. சுகதுக்கஞான உத்பத்தி விசேஷமின்மையின் சர்வ சரீரிகட்கும் ஏகாத்மத்தன்மை, சர்வ சரீரத்தின் கண்ணும் ஒரே ஆத்மா, அதன் லிங்கமாய சுகதுக்க ஞானாதிகட்குச் சர்வவிடத்தும் விசேஷமின்மையின், உரைக்கப்பட்டது. "அவ்விலிங்கவிசேஷமின்மையினானும் விசேஷ லிங்கமின்மையினானும், ஒரே தன்மை" எனச் சித்தாந்தம் பகரப்பட்டது. "நாநா ஆத்மாக்கள் வியவஸ்தையின்" ஒவ்வொரு சரீரத்தும் நாநா ஆத்மாக்கள், எங்ஙனம்? வியவஸ்தையின், ஒவ்வொரு சரீரத்தும் ஞான சுகாதிகள் நன்முகவிருக்கின்றன. ஏகாதிகரண்யத்தா னநுஸந்திக்கப்படுவனவல்ல. ஒரே ஆத்மத் தன்மையினிடத்தோ ஒரே சரீரரூபத்திலேயே அநுஸந்தானப் பிரசங்கம் வரும். வேறு

ஏது பகரப்படுகின்றது—"சாஸ்திர சாமர்த்தியத் தானும்" சாஸ்திரத்தும் இங்ஙனம் நன்ருகப் பொருத்தப்பட்டிருக்கின்றன. "ஞானி, அஞ்ஞானிகள் இருவர்கள் அஜர்கள் ஈசாநீசர்கள்"; "போக்தா போக்கியம் பிரேரிதாவையும் அறிந்து"; "இரு சுபர்ணங்கள் கூடியுள சகாயர்கள்"; "எங்ஙனம் அக்நியினதுக்ஷுத்ரங்களான விஸ்புலிங்கங்கள் விசேஷமாக வெளிப்படுகின்றன, இங்ஙனம் இவ்வாத்மாவினின்றும் விசேஷமாக வெளிப்படுகின்றன" என்பனவாதி ஜீவ நாநாத்தன்மை ஞாபக சுருதிகள். "எது பூர்வம் பிரஹ்மாவை யுண்டாக்கினது"; "ஏகவசி சர்வபூதாந்தராத்மா"; "நித்தியங்களினது மத்தியில் நித்தியம் சேதநங்கட்கும் சேதநம்" இவை முதலியன ஏகத்துவ சாஸ்திரங்கள் ஈஸ்வர விஷயங்கள். ஆகலின், ஒவ்வொரு சரீரத்தும் ஆத்மாக்கள் பின்னங்கள் என்பதாதி கணாத சூத்திர அதன் வியாக்கியானங்களும் ஆத்மைகத் தன்மையே வேதாந்த சாஸ்திராங்கீகாரமென அநுவதித்து நிராகரிக்கப்பட் டிருக்கின்றன.

மற்றும், எங்ஙனம் வேதாந்த சாஸ்திரத்தில் "தர்க்கத்திற்குப் பிரதிஷ்டையின்மையால்" என்னுமதிகரணத்தில் பகவான் வியாஸரால் கௌதம மத நிராகரணம் செய்யப்பட்டது. அஃதுறமு, நியாய தந்திரத்தும் கேவலாத்வைதமே வேதாந்த சாஸ்திராங்கீகாரம் என அநுவதித்து நிகாரிக்கப் பட்டதென அறிக.

மற்றும், எங்ஙனம் வேதாந்த சாஸ்திரத்தில் 'இதனுல் யோகம் கண்டிக்கப்பட்டது' என்னும் அதிகரணத்தில் பகவான் வியாஸரால் பதஞ்சலிமதம் நிராகரிக்கப் பட்டது. அஃதியைய, யோகதந்திரத்தும் கேவலாத்

வைதமே வேதாந்த சாஸ்திராங்கீகார மென அநு வதித்து நிராகரிக்கப் பட்டது. அங்ஙனமே, போஜ விருத்தியில் "அல்லது ஸ்வரூபப் பிரதிஷ்டை சிதிசக்தி" என்னுஞ் சூத்திர வியாக்கியான அவசரத் தில் "எவ்வேதாந்த வாதிகள் சிதாநந்த மயத்தன்மை ஆத்மாவிற்கு மோக்ஷம் என அங்கிகரிக்கின்றார்களோ அவர்களினது பக்ஷம் யுக்தமன்று. அங்ஙனமே காண் பிக்கப்படுகிறது. ஆநந்தம் சுகரூபமாகலின் சுகமும் சதாகாலமும் அறியப்படுந் தன்மையானே விளங் குதலின், நன்கு அறியப்படுந்தன்மையும் சம்வே தனமின்றிப் பொருந்தாதெனச் சம்வேதன சம்வேத் தியங்க ளங்கிகரித்தலின் அத்வைத ஹானி" என்ப தாதியால் வேதாந்தி அங்கிகரித்தற்றன்மையால் கேவ லாத்வைதமே அநுவதித்து நிராகரிக்கப்பட்டது.

மற்றும், எங்ஙனம் வேதாந்த சாஸ்திரத்தில் "பலம் இதனாற் பொருந்துதலின்" என்னு மதிகரணத் தில் வியாஸ பகவானால் ஜைமினிமத நிராகரணஞ் செ ய்யப்பட்டது. அஃதொப்ப, மீமாம்சா சாஸ்திரத்தும் கேவலாத்வைதமே வேதாந்த சாஸ்திராங்கீகாரம் என அநுவதித்து நிராகரிக்கப்பட்டிருக்கின்றது.

அங்ஙனமன்றோ, தர்க்கபாத வார்த்திகத்தில் "தா னும் சுத்தமாகலானும் அந்நிய வஸ்துக்களின்மையானு ம்,ஸ்வப்நம்போன்றஅவித்தையின் பிரவிருத்தி அவனை என் செய்யும்? அந்நியத்தால், உபப்லவ மங்கிகரிக்கின் த்வைத வாதம் பிராப்தமாகும். ஸ்வாபாவிகமான அவி த்தையையோ அற்பமேனும் நசிப்பித்தற்குச் சமர்த்த மின்று விலக்ஷணமாக அங்கிகரிக்கின் ஸ்வாபாவிகமா னது சிலவிடத்து நசிக்கின்றது. ஓர் ஆத்மாவை அங்

கரிப்பவர்கட்கோ விலக்ஷணகாரணமின்று" என்பன வாதியால் பட்டபாதர்களாலும் கேவலாத்வைதமே அநுவதித்து நிராகரிக்கப்பட்டது.

சாஸ்திர தீபிகையின் தர்க்கபாதத்தில் "ஆத்மா ஒன்றே ஜகத்திலிருந்ததென அங்கீகாரம்; அஃதே தனதிச்சையான் விருக்ஷரூபத்தாற் பீஜம் போன்று ஆகாசாதிப் பிரபஞ்ச ரூபத்தாற் பரிணமிக்கின்றது. சித்தேகரஸம் ஜடரூபத்தாலெங்ஙனம் பரிணமிக்குமெனின்? பரமார்த்தத்தாற் பரிணாமம் புகன்றதன்று; பின்னையோ, அபரிணாமமே பரிணாம மடைந்தது போன்று கண்ணாடிகளில் முகம்போல ஒன்றாயிருந்தே அநேகப் பிரகாரமாக அவித்தியாவசத்தா லிருக்கின்ற ஆத்மாவிற்கு ஆத்மாவே, சித்ரூபம் அசித்ரூபம்போல, அத்விதீயம் இரண்டாவதிருப்பது போன்று பார்க்கப் படுகிறது. அந்த இது அவித்தையை உபதானமாக வுடையது; ஸ்வப்நப் பிரபஞ்சம் போன்று மகத்தத் வாதிப் பிரபஞ்ச சிருஷ்டி. ஆகவே, "இந்தச் சர்வம் பிரஹ்மம்"; "இந்தச் சர்வம் ஆத்மாவே"; "ஈண்டு நாநா அற்பமுமின்று" என்பன வாதி அநேக அத்வைத வாதங்கள். அங்ஙனமே, "பரமாத்மா மாயைகளால் அநேக ரூபத்தை அடைந்தது" என்பது பேத ஞானத்திற்கு மாயாகாரணத்தன்மை வியக்தமாகவே தரிசிக்கப்பட்டது. அங்ஙனமே, "எவன் ஆத்மாவினின்று மன்னியவிடத்து லோகங்களை அறிகிறானோ அவனை லோகங்கள் நீக்கிவிடுகின்றன" என்பனவாதி நாநா ஆத்மதரிசன நிந்தை. "எவனிவ்விடத்து அநேகம்போன்று பார்க்கின்றானோ அவன் மிருத்தியுவினின்றும் மிருத்தியுவை அடைகின்றான்" என்பதும்

நாநாத்தன்மை தரிசனநிந்தை. இச்சர்வம் அத்வி தியம், பிரஹ்ம அபரம், அநர்த்தத்தைச் செய்யும்பேத திருஷ்டி; சிருஷ்டியும் அவித்தியா உபாதானமென்னு மர்த்தத்தைப் பிரகடனஞ் செய்கிறது" என்பன வாதியால் பார்த்தசாரதி மிசிரராலும் கேவலாத்வைதமே வேதாந்த சாஸ்திராங்கீகாரமென அநுவதித்து நிராகரிக்கப்பட்டது.

பாணினி சாஸ்கிரத்திலும் பர்த்ருஹரியால் "எவ்விடத்துத் திருஷ்டாவும் திருசியமும் திருக்கும் கற்பிக்கப்பட்டன, அவ்வர்த்தத்திற்கே திரிபந்தவாதிகள் சத்தியத் தன்மை உரைக்கின்றனர்" என்பதாதியாற் கூறப்பட்டிருக்கின்றது.

மற்றும்,எங்ஙனம் வேதாந்த சாஸ்திரத்தில் "பதிக்குப் பொருத்த மின்மையான்" என்னு மதிகரணத்தில் பகவான் வியாஸரால் பசுபதிமத நிராகரணஞ்செய்யப் பட்டது; அதுபோன்றே சைவாகமத்தின் கண்ணும் பகவான் சிவனால் கேவலாத்வைதமே வேதாந்த சாஸ்திராங்கீகாரமென அநுவதித்து நிராகரணஞ் செய்யப்பட்டது. அங்ஙனமன்றோ,மிருகேந்திர சம்ஹிதையின் ஞானபாத இரண்டாவது படலத்தில் "பாத்துவாஜர் கூறுகின்றார்—வேதாந்த சாங்கிய சதசத் வாதார்த்தத்தை யுடைய மதாதிகளில் சாதனத்தோடு கூடிய மோக்ஷமிருக்கின்றது; சிவாகமத்திலென்ன விசேஷம்? சக்ரர்(இந்திரன்)கூறுகின்றார்—"இயற்றியவர்கள் அசர்வக்ஞர்களாகலான் விஷயக்கிரகணம் ஸ்பஷ்டமன்று; உபாயங்கள் பலத்தோடுகூடியன. அஃதொப்ப, சைவத்தில் இந்த வெல்லா முயர்வு. வேதாந்தங்களில் சிதசித்வியக்தியா விலக்ஷிக்கப்படுமாத்மா வொன்றே; இந்தச்

சர்வஜ்ஞத்து மாத்மாவே;ஈண்டு நாநா அற்பமு மின்று; இது பிரதிஞ்ஞை மாத்திரமே; நிச்சயம் எக்காரணங் கொண்டு? அற்றேல், ஆண்டுப் பிரமாணம்; ஆத்மா பிரமேயத் தன்மையை அடைகிறது. எவ்விடத்திவ்விரண்டும் அவ்விடத்து நான்கு மிருக்கின்றன; இங்ஙனம் அத்வைத ஹானி உண்டாகின்றது. அல்லாக்கால், நிஷ்ப்ரமாணத் தன்மை. ஆத்ம வாதிகளால் போகசாம்யமும் மோக்ஷ மின்மையும் அங்கீகரிக்கப் படவில்லை: எவரும் பாபத்தைக்கொள்வது மின்று; புண்ணியத்தைக் கொள்வதுமின்று; விபு" என இவ்விடத்து வேதாந்த, சாங்கிய, ஆர்ஹத, காணாதாதி மதங்களிலும் முக்தியும் அதன் சாதனங்களும் இருக்கின்றன. அம்மத அபேக்ஷையாற் சிவாகமத்திற் கெவ்விசேஷம் என இந்திரனைக் குறித்துப் பாத்துவாஜராற் பிரஸ்னஞ் செய்யப்படுங்கால் இபற்றியவர்கள் அசர்வஞ்ஞர்களாகலா னென்னும் உத்தர வசநத்தால் வேதாந்தாதி சாஸ்திர மிபற்றியவர்கட்கு அசர்வஞ்ஞத்தன்மை யிருத்தலின், அம்மதங்களிலர்த்த நிர்ணயம் பொருந்தா தெனச் சாமான்யமாகத் தூஷித்து, விசேஷமாக வேதாந்த மதத்தை ஆதியிற் றூஷித்தற்பொருட்டு, வேதாந்தங்களி லென்பதாதியால் நிஷ்பிரபஞ்ச அத்விதீய ஆத்ம ஸ்வரூப வேதாந்த மதத்தை அநுவதித்து,அதன் நிராகரணத்தின் பொருட்டு விகற்பஞ் செய்யப்பட்டிருக்கிறது. வேதாந்தங்கள் பிரமாணமா? அல்லது அப்பிரமாணமா ? எக்காற் பிரமாணம் அக்கால் ஆத்மா பிரமேயம் என இருவஸ்து பிராப்தமாம்; எவ்விடத்துப் பிரமாணமும் பிரமேயமும் அவ்விடத்துப் பிரமாதாவும் பிரமிதியும் என மீண்டுமிரண்டு வஸ்துக்கள் பிராப்தமாகலின், நான்கு வஸ்

துக்கள் பிராப்தமாய் அத்வைத ஹானி ஆகிறது. இரண்டாவதில் வேதாந்த மதத்திற்கு அப்பிராமாணிகத் தன்மையே. ஆத்மா வொன்றாகலின் சர்வ புருஷர்கட்கும் சுகாதி அநுபவசாமியமும் ஆகின்றது; மோக்ஷமின்மைப் பிரசங்கமும் வரும் என இவ்விதம் நிராகரிக்கப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் மிருகேந்திர சம்ஹிதைக்கு வியாக்கியானஞ் செய்த பட்டநாராயண பண்டிதராலும் ஸ்ரீகண்டாசாரியராலும் அவ்வியாக்கியானத்திற்கு வியாக்கியானஞ் செய்த அகோரசிவாசாரியராலும் வேதாந்தமத அநுவாத அதன் நிராகரணப் பிரகாரமானது விஸ்தாரமாக அநேகவிதமாய் உரைக்கப்பட்டிருக்கின்றது. அவையெல்லாம் கிரந்தம் விஸ்தாரமாகுமென்னும் பயத்தா னீண்டெழுதப்படவில்லை. அங்ஙனமாயினும், அறிவுறுத்தற் பொருட்டு அற்பமாக எழுதப்படுகின்றது. அவற்றுள், பட்டநாராயண ஸ்ரீகண்டாசார்ய விருத்திக் கிரந்தங்களில், 'வேதாந்தங்களி லொன்றேயென"; அங்ஙனமே, "ஏகமாயும், வசஞ் செய்வதாயும், சர்வபூதங்களுள்ளு மிருப்பதாத்மா, ஒன்றாயிருக்கும் விசுவத்தை அநேக விதமாகஎது செய்கின்றதோ" என்பதாதி சுருதிகளால் பரமாத்மாவே சகல சிதசித்துக் தன்மையாயும், ஆவிர்ப்பாவ திரோபாவ காரணரூபமாயும், பரிபூர்ண சாட்குண்ய வைபவ ஸ்வதந்திரனமாயு மிருந்தும் சம்ஸாரத்தின் பொருட்டு அவ்வந் நாநாவித மநேலக்ஷண உபாதி பேத வேறு சுபாவத்தை அநுஸரித்து யதார்த்தத்தை யறிந்து மோக்ஷத்தின் பொருட்டு உண்டாகிறது என வேதாந்தத்திற்கே அவ்வவ் வைசித்திரியத்தால் ஸ்திதி விருத்தவின், அத்வைத விளக்கத்திற்குத் துவைதத்

தோற்றம் இரு சந்திராதி ஞானம்போன்று பிராந்தியாகலின். அங்ஙனமே, பகவான் பர்த்ருஹரியும் "திமிரத்தாற் கலக்கப்பட்ட ஜனங்கள் சுத்தமான ஆகாசத்தைச் சித்திரமான மாத்திரைகளாற் கலப்புடையதுபோல அங்கீகரிக்கின்றார்கள்; அங்ஙனமே, நிருவிகாரமாயும் அமிருதமாயுமிருக்கும் இப்பிரஹ்மம் அவித்தையாற் கலப்படைந்ததுபோன்று பேதரூபத்திற் பிரவிருத்திக்கின்றது" எனக்கூறுகின்றார். ஆகவே, இப்பரப்பிரஹ்ம பரமாத்ம லக்ஷணம் அபின்னமே, மனதிற்கே சம்ஸாரதர்மமான சுகதுக்காதிகளோடு சம்பந்தம்; பரமாத்மாவோ, ஜலம் சூரியனிடத்திற்போன்று, பிரதிபிம்ப பேத உபாதிகளோடு அபின்னமாயினும், பேதம் போன்று விளங்குகின்றது. "எங்ஙனம் இந்த ஜோதிரூப ஆத்மா விவஸ்வான் (சூரியன்) ஜலத்தினின்றும் வேறே; ஒன்றாகச் சென்று உபாதியினால் பேதரூபஞ் செய்யப்படுகிறது இங்ஙனமே, உத்பத்தியின்றிய இவ்வாத்மா சர்வ சரீரங்களிலும் தேவனே" அவ்விது பொருத்தமாகாதெனவுங் கூறுகின்றார்.

அகோரசிவாசாரிய ரியற்றிய அதன் விருத்தி வியாக்கியானத்தும் அநந்தாம் அந்நியதரிசனங்கட்கு அஸ்புடத்தன்மை பிரகாசிப்பித்தற் பொருட்டு முதலில் வேதாந்த வாதி மதத்திற்கு அஸ்புடத்தன்மையைச் சூசிப்பித்துத் தரிசிப்பித்தற்பொருட்டு வேதாந்தங்களிலென்பதாதி சுலோகார்த்தத்தால் அம்மதம் உபந்நியாசஞ் செய்யப்படுகின்றது; அஃதே காண்பிக்கப்படுகின்றது; இவ்வெல்லாம் ஆத்மாவே என்பன வாதியால். சத்திய ரூபமே அவித்தியாகாரணத்தாற் பசு மிருகாதி அநந்த சரீரபேதத்தால் அநேக பிரகாரமாக

ஜீவாத்மாக்களால் ஸ்வப்பநத்திற்போன்று பார்க்கப்படு கின்றது;ஸ்வப்பநத்திலோ அநந்த புருஷப் பிரகாசாதிப் பிரகாசம பார்க்கப்படுகின்றது. ஆகவே, இருசந்திர விளக்கம்போன்று துவைத விளக்கமும் மித்தையென ஒரே ஆத்மா சுருதியினலும் யுக்தியினலும் சித்த மாதா நின்றது. ஆகலின், மிருகேந்திர சம்ஹிதை, அதன் விருத்தி, அதன் வியாக்கியான பரியாலோசனை யால் கேவலாத்வைதமே வேதாந்த சாஸ்திராங்கீகார மெனச் சித்தமாயிற்று.

அங்ஙனமே, அகஸ்திய மஹரிஷி இயற்றிய சிவ ரகஸ்யத்தின் மூன்றுமம்சம் முப்பத்தாரு மத்தியாயத்தி லும் "ஹே வேத வேதாந்த தத்துவத்தை அறிந்த மூர்த்தியே! உமக்குக் கெளதமரது ஆகாசநித்தியத்துவ வாதமதமன்று; உமக்கு ஜைமினியினது ஶப்த நித்தி யத்துவ வாதமன்று; உமக்கு வேதாந்திகளினது மித் தியாத்துவ வாதமுமன்று; வேதாந்த சாஸ்திரத்தில் பந்தமும் மோக்ஷமு மில்லை, அங்ஙனமே, திருஷ்டி சிருஷ்டி வாதமும் பார்க்கப்படுகின்றது; அவித்தையின் காரியங்கள் ஈண்டு யாதுமின்று; உமக்கு ஜகத் ஜாலம் எக்காரணத்தான் காரியங்களாற் கற்பிக்கப்பட்டிருக் கின்றது, அநந்த வேதாந்த வார்த்தை விசாரத்தி லின்று. ஆராதக ஆராத்யபாவ அபிமானம் அரனுக் கின்றயின், இப்பொழுதுமின்று. கர்மமார்க்கம் நஷ்ட மாகும்; சிவ ஆராதனமார்க்க வார்த்தை எங்கிருக் கும்" எனக் கூறப்பட்டிருக்கின்றது.

இவ்விடத்துக் கெளதம ரங்கீகரித்த ஆகாச நித் தியத்தன்மை, ஜைமினி அங்கீகரிக்கும் சப்த நித்தியத்தன்மை, வேதாந்தி அங்கீகரிக்கும் பிர

பஞ்ச மித்தியாத் தன்மை, பந்தமோக்ஷ வியவஸ்தை யின்றிய திருஷ்டி சிருஷ்டியாதியையும் அநுவதித்து நிராகரிக்கப்பட் டிருக்கின்றன. ஆகவே, கௌதம ஜைமினி சூத்திரக்கார அநேக பாடத்தால் வேதாந்த சப்தத்திற்கும் பிரஹ்ம சூத்திர மியற்றிய வியாஸ மஹரிஷி பரத்தன்மை சித்தித்தலின், கேவலாத்வைதமே வியாஸ தாத்பர்ய விஷயமெனச் சித்திக்கின்றது.

மற்றும், வேதாந்த சாஸ்திரத்தில் "உத்பத்தி பொருந்தாமையின்", "சமுதாய இருவேது வுடையதிலும், அத னப்பிராப்தி"; "அன்று, ஒன்றனிடத்தில் பொருந்தாமையின்"; "ஒரே ஆத்மா சரீரத்தி விருத்தலின்" என்னுமதிகாணநான்கினும் பகவான் வியாஸரால் பாஞ்சராத்ர பௌத்த ஆர்ஹத சார்வாக தந்திரம் நான்கின் நிராகரணஞ் செய்யப்பட் டிருக்கின்றது. அது போல் பாஞ்சராத்திராதி நான்கு சாஸ்திரத்திலும் கேவலாத் வைதமே வேதாந்த சாஸ்திராபிமதமென அநுவதித்து நிராகரணஞ் செய்யப்பட்ட தென அறிக.

ஆகவே, புகன்ற சாஸ்திரங்களில் அவ்வவ்விடத்துக் கேவலாத்வைத அநுவாத பூர்வக நிராகரணஸ்தலத்தின்கண் கேவலாத்வைதத்திற்கு வேதாந்திமதத் தன்மை பிரதிபாதித்தலான், அவ்வித அத்வைதமே வேதாந்த சாஸ்திர அங்கீகாரார்த்தமெனச் சித்திக்கில், வியாஸருக்கு வேதாந்த சாஸ்திரப் பிரவர்த்தகத்தான் வேதாந்த வாதித்தன்மை அவசிய மிருத்தலின், கேவலாத்வைதமே வியாஸ அபிமத மென ஸ்பஷ்டமாகாநின்றது. ஆகலின், சர்வவாதிகளும் கைக்கொண்ட கபில கணாத கௌதம பதஞ்சலி ஜைமினி சாஸ்திரங்களினும், சூத்ர பாஷ்ய வார்த்திக விருத்திக்கிரந்

தங்களிலும், பாசுபத பாஞ்சராத்ர பௌத்த ஆர்ஹத சாஸ்திரங்களிலும் புகன்ற மார்க்கத்தாற் பத்துச் சாஸ்திரங்களில் வேதாந்தி மத நிராகரணப் பிரஸ்தாவத்திற் கேவலாத்வைதமே அநுவதிக்கப் படுதலான், பிரதிவாதி வாக்கைப் பிணைத்தல் பூர்வாம் சகல ஜனங்களி னிருதயத்திற் சென்றிருத்தலான், அவ் வத்வைதமே வியாஸ தாத்பர்ய விஷய மென்பது கொள்ளதகு மென அறிகின்றோம்.

ஆகவே, சகல வேதாந்த வாக்கியார்த்தத்தைச் சூசிப்பிப்பவைகளான வியாஸ சூத்திரங்கட்கு அத்விதியப் பிரஹ்மத்திற் றாத்பரியம் நிச்சயமாகுங்கால், அதன்மூல பூகமான சர்வ உபநிஷத்துக் கட்கும் அத்விதியப் பிரஹ்மத்திற் றாத்பர்யஞ் சித்தமே யாம்.

இதனானேயே, ஸ்ரீமத் சூதசம்ஹிதையின்கண் யக்ஞவைபவகண்டம் பத்தாமத்தியாயத்தில் "ஒன்றே அத்விதிய மிருக்கின்றது எனச் சுருதி அதிப் பிரியத்தோடு கூறுகின்றது; மாயாமாத்திர மிந்தத்த்வைதம் என வேறு சுருதி கூறுகின்றது; ஏகத்தன்மையைப் பார்ப்பவனுக்கு மோஹமேது சோகமேது எனக் கூறுகின்றது. இரண்டாவதா லவசியம் பயம். அற்பத்திற் சுகமின்று என்பதுங் கூறுகின்றது. ஆகலின், தர்க்கப் பிரமாணங்களால் வஸ்துவின் ஏகத்தன்மை நன்றாக நிச்சயிக்கப்பட்டது. வித்துவான்களினது அநுபூதியாலும் வஸ்துவின் ஏகத் தன்மை நன்றாக நிச்சயிக்கப் பட்டது. எந்த த்விஜர்கள் மஹாவாக்கியத் தானேயே வஸ்துவின் ஏகத்தன்மையை அறிகின்றார்களோ, அவர்கள் இச்சம்ஸாரத்தி னின்றும், மோக்ஷத்தை யடைகின்றார்கள்; ஸ்வபநத்தி னின்று மெழுந்த

வன் போல. எந்தநரர்கள் பேதஞானத்தை வைத்துக் கொண்டு முக்தியை இச்சிக்கின்றார்களோ, அவர்கள் மஹாகோர சம்சாரத்திலேயே வீழ்கின்றார்கள்; சம்சயமின்று" எனவும், அவ்விடத்தே முப்பத்தொன்பதா மத்தியாயத்தின்கண் "முனீஸ்வரர்காள்! அநந்தரம் காரணமிருத்தலின் விஸ்தரமின்றிச் சுருக்கமாகச் சர்வ வேதங்களினது அவிரோதத்தை நன்கு புகல்கின்றேன். நன்கு அநுஷ்டிக்க விரதத்தை யுடைய முனிநாதர்களே! வேதத்தின் தொகுதி இருவிதம். சுருங்கமாகச் சத்திய அத்வைதபரம் சிலவேத பாகம். த்விஜர்களே! அசத்திய த்வைத நிஷ்டம் அந்நிய வேதபாகம். ஆஸ்திகர்களே! அத்வைதம் சதா சத்தியமே. த்வைதம் அசத்தியம். சர்வ காலத்தின்கண்ணும் அத்வைதம் பிரத்தியக்ஷாதிகளா லறியப்படாமையின். ஆஸ்திகர்களே! அத்வைத சுருதி சாக்ஷாத் அவ்விடத்திலேயே அர்த்தத்தை யுடையதாகின்றது; சுருதியின்றிப் பேதமானது சதா லோக சித்தமே. அதனால், பிரமாணத்தை அதிக்கிரமித்துச் செல்லும் சுருதி அவ்விடத்தில் அர்த்தத்தை யுடையதன்று" எனவும், அதன்கண்ணேயே, பிரஹ்மகீதையின் ஐந்தாமத்தியாயத்தில், "யாது நீ என்னுஞ் சொற்குப் பொருள் விளங்குகின்றது அதுவே நான்என்னுஞ் சொற்குப்பொருள். யாது நான் என்னுஞ் சொற்குப் பொருள் தோன்றுகின்றது, அதுவே நீயென்னுஞ் சொற்குப் பொருள். தேவர்காள்! நீ நான் என்னுஞ் சொல்லி னிலக்ஷியார்த்தமாகிய சாக்ஷாத் பிரத்தியக் சித்தே அது என்னுஞ் சொல்லி னிலக்ஷியார்த்தம். அஃதிவ்விடத்து விசாரமின்று. அதனால் நீ நான் என்னுஞ் சொல்லின் வாச்சியார்த்தமாகிய

தேகாதி வஸ்துக்கட்கு அது என்னுஞ் சொல்லின் அர்த்தத்தைத் தத்வமசி என்னுஞ் சுருதியானது கூறுவதின்று. அதன் அர்த்த ஐக்கிய விருத்தாம்சமாக வாச்சியத்திலிருப்பதைவிட்டு, அவிருத்தமான சிதாகாரத்தை லக்ஷித்துச் சுருதி கூறுகின்றது. அது என்னு மர்த்தத்தின்கண்ணும் நீ யென்னு மர்த்த ஐக்கிய விருத்தாம்சமான காரணத்துவாதி வாச்சியார்த்த மின்றியே கேவலம் சிதாகாரத்தை லக்ஷித்து மீண்டும் அதற்கு நீ என்னுமர்த்த ஐக்கியத்தையும் புகல்கின்றது. ஆஸ்திகர்காள்! அது நான் என்னுஞ் சொல்லி னர்த்தரூப சின்மாத்திரப் பரமாத்மாவிற்கு ஸ்வத சித்தமானயாதொரு ஏகத்தன்மையோ அதுவே வாக்கியார்த்தம். இதனினின்றும் வேறான வாக்கியார்த்தம் யாதோ அது வாக்கியார்த்த மன் றென்பதிற் சம்சய மின்று" எனவும், அவ்விடத்தேயே, பன்னிரண்டா மத்தியாயத்தில், "எந்த மோகிதர்கள் வேதங்களினது அர்த்தத்தை வேறு விதமாகக் கூறுகின்றனர் அவர்கள் மிகவும் நகைத்தற்குரியவர்களே; மற்றையோ ரன்று; இதிற் சம்சய மின்று. எவர்கள் நானுரைத்த பொருளை அன்றிக் கூறுகின்றனரோ அவர்கள் ஆலம்ப மின்றிய அந்த கூபத்திலேயே விழ்கின்றனர்; இதிற் சம்சய மின்று. சுரசிரேஷ்டர்களே! வேதத்தி னர்த்தம் பரமாத்வைதமே; வேறு அன்று. அன்றாயின், இவ்விடத்தின்கண்ணேயே எனது சிரம் விழும்; இதிற் சம்சய மின்று. வேத வாக்கியங்களினது அர்த்தம் வேறு பிரகார மென்னும் பெருஞ் சம்சயத்தால் அநிர்ணய அர்த்தத்தைக் கொள்வீர்களாகில் உங்கள் சிரமும் விழும். தேவசிரேஷ்டர்களே! இதனினின்றும் மேற் கூறத்தக்க தொன் றுமின்று; சத்தியமே

என்னுற் கூறப்பட்டது; சம்புவின் பாதத்தைத் தொடுகிறேன்" எனவும் கூறப்பட் டிருக்கின்றன.

இங்ஙனம் பகவத்கீதைக்கும் கேவலாத்வைத பரத் தன்மையே அங்கீகரிக்கத் தக்கது; அதன் பதின்மூன்ரு மத்தியாயத்தில்,—"ஏபாரத! சர்வ க்ஷேத்திரங்களிலும் என்னை க்ஷேத்திரக்ஞனுக அறி. க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களினது எந்த ஞான முண்டோ அந்த ஞானம் (உண்மைஞான மென) எனதபிப்பிராயம். யாதொரு முற்புகன்ற க்ஷேத்திரமும் தனது தர்மங்களால் எவ்விதம் என்பதும்,இதற்கு விகாரம் எதுஎன்பதும், எதனினின்றும் எக்காரியம் உண்டாகின்றதென்பதும், அதுவும் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களினது எவ்வுபாதியாகிய சத்திகளாற் செய்யும் பிரபாவங்களுமாய அந்த க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களினது யதார்த்தத்தை நாம் கூறக் கேட்பாயாக. வசிஷ்டாதி ரிஷிகளாலும் அநேக ப்ரகாரமாகவும், ரிக்முதலிய மந்திரச் சந்தங்களாலும் நாநாப் பிரகாரங்களாக விவேகத்தாலும், பிரஹ்ம சூத்திர பதங்களாலும், யுக்தியோடு கூடியதாலும்,நிச்சயத்தாலும் கூறப்படுகின்றது" என்பனவாதி பகவத் வசனங்களால் க்ஷேத்திரக்ஞசப்த ஜீவனுக்கு 'என்னை என' பிரஹ்மத்தன்மை புகன்று, அவ்வர்த்தமே பிரஹ்ம சூத்திரப் பிரதிபாத்தியத் தன்மை உரைத்தலான், பிரஹ்ம சூத்திரங்கட்கும் கேவலாத்வைத பரத்தன்மை நிர்ணயஞ் செய்யப்படுதலின், அதன் சமான அர்த்தத்தையுடைய பகவத்கீதைக்கும் கேவலாத்வைத பரத் தன்மை நிச்சயமாகலின்.

இதனுனே, பாஞ்சராத்திரத்தில் பாத்மசம்ஹிதையில்—"பர க்ஷேத்திரக்ஞ ஆத்மாக்களின் ஐக்கியத்தைச் சுருதி கூறுகின்றது. க்ஷேத்திரக்ஞனுக்கு அநேகத்

தன்மை தேகபேதத்தாற் றோற்றுகின்றது. ஒரேவிம்பத்திற்குத் தர்ப்பணாதிகளில் எங்ஙனம் பேதம்? பஞ்சபூதக் கூட்டம் க்ஷேத்திர மெனப்படும். அவ்விடத்தில் நிலைத்திருக்கும் யாதொரு ஜீவனே அவனைப் புத்திமான்கள் பரனென்னும் பெயரினையுடைய க்ஷேத்திரஞ்ஞனாக அறிகின்றார்கள்" என்பதாதியால் பரக்ஷேத்திரக்ஞர்கட்கு ஐக்கியம் கூறப்பட் டிருக்கின்றது. இக்காரணத்தாலேயே பகவத்கீதைக்கு அநுமா னியற்றிய பிசாசுப் பாஷ்யத்தின் கண்ணும் புகலப்பட் டிருக்கின்றது. இரண்டா மத்தியாயத்தில் "அசத்திற்குப் பாவமின்று; சத்திற்கு அபாவமின்று; இவ்விரண்டிற்கும் அந்தம் தத்துவதரிசிகளால் பார்க்கப்படுகின்றது. அசத்திற்கு - அநித்தியமான ரஜ்ஜுசர்ப்பம் போன்ற திருஷ்ட நஷ்டசுபாவ ஜகத்திற்கு; பாவம்—சத்தை; இருப்பதின்று; அங்ஙனமே, பரமார்த்தத்தாற், சத்திற்கு—ஆத்மாவிற்கும், அபாவம்—அநித்தியமானத்தன்மை, இருப்பதின்று; சர்வவிடத்தும் வியபிசாரமின்மையான். இவ்விரண்டிற்கும்—சதசத்திற்கு, திருஷ்ட நஷ்டத் தோற்றம், அந்தம்—நிச்சயம், தத்துவதர்சிகளால்—ஆத்மதர்சிகளால் என்பது பொருள். அதனால், தத்துவதர்சிகளினது திருஷ்டியை ஆசிரயித்துச் சோகத்தையும் மோகத்தையும் விட்டுச்சித உஷ்ணாதிகளைப்பொறுத்துக்கொள் என்ப தபிப்பிராயம்" எனவும், அதன்கண்ணேயே, பதினெட்டா மத்தியாயத்தில்—"பக்தியால் எவ்வளவு எப்படி இருக்கிறேன் என என்னைத் தத்துவத்தா னறிகின்றார்களோ, ஆதலின் என்னைத் தத்துவத்தானறிந்து அதன்பின் அடைகிறான். பக்தியால்—பஜனத்தால், என்னை—சர்வேசுவரனை, அறிகின்றார்கள். எவ்வளவு என்பது—நான் உபாதியியற்றிய பின்னப்பிரபஞ்ச ரூபத்தாலும், எப்படியிருக்கிறேன்

என்பது—சர்வ உபாதியுமின்றிய ரூபத்தானும், என வும், தத்துவத்தால்-பரமார்த்தத்தால், ஆகலின் அறிந்து-ஆகலின் என்னை அதன் பின்னடைகின்றான், பிரஹ்மத்தை யடைகின்றான் என்பது பொருள்" என்பதாதியானும் பிரபஞ்சமித்தையாத் தன்மைப் பிரதிபாதன பூர்வகம் ஜீவப் பிரஹ்மங்களின ைக்கியம் பிரதி பாதிக்கப்பட் டிருக்கின்றது.

அங்ஙனமே, யாஜ்ஞவல்க்ய ஸ்மிருதியிலும்—"எங்ஙனம் ஒரு ஆகாசம் கடாதிகளில் பேதமடைகின்றது, எங்ஙனம் ஜல ஆதாரங்களில் அம்சுமான் போன்று, அங்ஙனமே ஒரே ஆத்மா அநேகமாயும் இருக்கின்றது" என்பதாதி வசநசமூகங்களும் கேவலாத்வைதத்தையே புகல்கின்றன.

இங்ஙனம் விஷ்ணுபுராணத்திலும் ஆறுவதமிசத்தில்—"அப்பாவத்தான் அத்தன்மையை அடைந்தவன் பரமாத்மாவோடு அபேதமாகின்றான்;பேதமோ அவனுக்கு அஞ்ஞானத்தாற் செய்ததாகின்றது. பேதத்தைத் தோற்றுவிக்கும் அஞ்ஞானம் அத்தியந்தம் நாசமடையுங்கால், அசத்தாகிய ஆத்மப்பிரஹ்ம பேதத்தை யார் செய்வது?"பரமார்த்தத்தால்ஞானசொரூபம் அத்தியந்தம் நிர்மலம்; அதுவே பிராந்தி தர்சனத்தால் அர்த்த ரூபமாகவிருக்கின்றது;எது பேதமின்றியதாயும்,சத்தாமாத்திரமாயும், கோசரிக்கக் கூடாததாயும், வாக்கும் ஆத்மாவாலறியும் யோக்கியமாயும் இருப்பது, அந்த ஞானம்பிரஹ்மமென்னும் பெயருடைத்து;நான் எனது என்னுமிது அவித்தையின் வியவகாரம்; பரமார்த்தத்தான்எதுவாக்கிற்ககோசரம் அஃது இதனோடுசம்பந்தமின்று" என்றுகூறுவனவும், அவ்வவ்விடத்தில் முதலம்சத்தின்முடிவிலும்—'நான் விஷ்ணு, இச்சர்வம்ஜநார்த்

தனன், அவனி னின்றும் வேறு காரிய காரண சமூக மின்று. இவ்வித மன மெவனுக்கு இருக்கிறது அவனுக்குச் சம்ஸாரத்தினின்று முண்டாகும் துவந்துவ சம்பந்தங்கள் மிகுதியு முண்டாவன வல்ல” என்பதாதி வசந சமூகமும் கேவலாத்வைதத்தையே பிரதிபாதிக்கின்றன.

ஸ்ரீ பாகவதத்திலும் பதினோராவது ஸ்கந்தத்தின் பதினொன்றாவது அத்தியாயத்தில்—ஸ்ரீ கிருஷ்ணர்—எனக்குப் பத்தன் முக்தன் என்னும் வசநம் குணத்தான், உண்மையினன்று; குணம் மாயா மூலமாகலின், எனக்கு மோக்ஷமின்று, பந்தமின்று, சோகமோஹமும், சுகதுக்கமும், தேகோத்பத்தியும் மாயையால்; ஸ்வப்நத்திற்போல் ஆத்மாவிற்குக் கியாதிசம்ஸ்ருதிகள் வாஸ்தவமோ அன்று. ஏ உத்தவ! சரீரிகட்கு வித்தை அவித்தைகள் எனது சரீரமென வறி; மாயையால் என்னால் நிர்மாணஞ் செய்யப்பட்டவை; முதலவைபந்த மோக்ஷஞ் செய்பவை. ஹே மஹாபுத்திமானே! ஒன்றுயென தம்சமான ஜீவனுபவிவனுக்கு அநாதி அவித்தையாற்பந்தம், வித்தையானும் அங்ஙனமே வேறு (மோட்சம்)”, மூன்றாவது ஸ்கந்தத்தின் தேவஹூதி கபில சம்வாதம் இருபத்தெட்டாம் அத்தியாயத்தில்—“ சர்வ பூதங்களிலும் ஆத்மாவையும், ஆத்மாவினிடத்திற் சர்வ பூதங்களையும், அங்ஙனமே பூதங்களில் ஆத்மத்தன்மை போன்று அநந்ய பாவத்தாற் றரிசிக்க. எங்ஙனம் ஒரே ஜோதியானது தன் காரணங்களில் நாநாவாகத் தோற்றுகின்றது. யோனிகளினது குணவைஷம்யம், அங்ஙனமே பிரகிருதியிலிருக்கும் ஆத்மா. ஆகலின், பாவிக்கக் கூடாததாயும், சதசத்ரூபமாயும், தேவத்தன்மையுடையதாயுமுள்ள இத் தனது பிரகிருதியை ஜயித்துச் சொரூபமாக விருக்கின்றான்.” இருபத்

தொன்பதா மத்தியாயத்தில்—"சர்வபூதங்களினிருதய த்திலிருக்கும் வஸ்துவை எதுகாறும் அறியவில்லையோ அதுகாறும் தன் கருமத்தைச் செய்துகொண்டு ஈஸ்வரனுய வென்னை அர்ச்சிராதியால் பூஜிக்க. எவன் ஆத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் அற்பமாயினும் பேதத்தைச் செய்கின்றானோ, அப் பேத திருஷ்டியுடைய புருஷனுக்கு மிருத்தியு மிகப்பயத்தைக் கொடுக்கின்றார்"; முப்பத்திரண்டா மத்தியாயத்தில்—"பரப்பிரஹ்மம், பரமாத்மா, ஈசுவரன், ஏகம் (ஆயுள்ள) ஞானமாத்திரமே திருசியாதிபிருதக் பாவத்தாற் சேட்டிக்கின்றது. யோகிக்குச் சம்பூர்ண யோகத்தால் ஈண்டு எல்லாவற்றிலும் சங்கமின்றிய பிரயோஜனமாகிய இவ்வளவு அங்கீகாரம் பொருந்துகின்றது. நிர்க்குணமாயும் ஞான ஸ்வரூபமாயும் ஒன்றாயுமுள்ள பிரஹ்மம் பிராந்தியால் பாஹ்ய இந்திரியங்களால் சப்தாதி தர்மங்களையுடைய அர்த்தரூபத்தால் விளங்குகின்றது". முப்பத்து மூன்றா மத்தியாயத்தில்—"பக்திப் பிரவாகரூப யோகத்தாலும், பலமான வைராக்கியத்தாலும், உசித அநுஷ்டான யோகமாய பிரஹ்ம காரண ஞானத்தாலும், விசுத்த மனதாலும், எங்கும் வியாபித்திருப்பதாயும், தன்னனுபூதியால் மறைந்த மாயாகுண விசேஷணமுடையதாயுமுள்ள தன்னை (தியானஞ்செய்து) ஜீவர்கட் காசிரயமாயும், பகவனாயுமுள்ள பிரஹ்மத்தின்கண் மனதை வைத்தாள். ஜீவத்தன்மை நீங்கியமையின், கிலேசமின்றிய ஆத்மசுகமுடையவள். நித்தியாரூட சமாதியாகலின், குணப்பிராந்தி நீங்கியவள். அப்பொழுது அவள் ஆத்மாவை (தேஹத்தை) எழுந்தவனுக்கு ஸ்வப்நதிருஷ்டம்போன்று ஸ்மரிக்கவில்லை." என்பதாதி வசந சமுதாயமும் கேவலாத்வைதத்தையே பிரதிபாதிக்கின்றது.

ஆகவே, முற்புகன்ற ரீதியால் கபிலாதி சூத்திரத்திலுள்ள கேவலாத்வைத அநுவாத உபோத்பலித சுருதி சூத்திர ஸ்மிருதி இதிகாச புராணங்கட்குக் கேவலாத்வைத பரத்தன்மையே நிச்சயஞ் செய்யப்படுதலின், "ஹே த்விஜர்களே! சுருக்கமாகச் சிலவேத பாகம் சத்திய அத்வைதபரம். வேறு வேதபாகம் கற்பித த்வைத நிஷ்டம்" என்னும் ஸ்ரீமத் சூதசம்மிதை வசந அநுசாரத்தால் அவ்வவ் விடத்துப் பேதத்தைப் பிரதிபாதிக்கும் சுருதி சூத்திர ஸ்மிருதி இதிகாச புராணங்கட்குக் கற்பிதத் த்வைத பரத்தன்மையே ஸ்திரஞ்செய்க. இதனனே, சாக்ஷாத் பரமேஸ்வர அவதாரரூபமாயும் சர்வக்ஞராயும் சகல சுருதி சூத்திர ஸ்மிருதி இதிஹாச புராண ஆகம சம்ஹிதாதி தாத்பர்ய விஷயரூப அர்த்த நிர்ணய சதுரராயுமுள்ள ஸ்ரீமத் பகவத் பாதரால் சுருதி சூத்திர கீதை சநத்சுஜாதிய சஹஸ்ரநாமாதி பாஷ்யங்களில் கேவலாத்வைதமே பரமார்த்தமென மிகவெளிப்படையாய்ப் பிரதிபாதிக்கப்பட் டிருக்கின்றது. இதனனே ஆதித்திய புராணத்தில்—"சவிதாநந சங்கரர் வியாஸ சூத்திரங்களை விஸ்தரித்துச் சுருதியி னதர்த்தத்தை எங்ஙனம் புகன்றார், அவ்வர்த்தமே சுருதிக்குக் கிரகிக்க" எனக் கூறப்பட்டிருக்கின்றது. கூர்ம புராணத்திலும்—"பக்தர்களினது ஹித இச்சையால் ஸ்ரௌத ஸ்மார்த்த ஸ்தாபனத்தின் பொருட்டு நீலலோஹித சங்கரர் அவதாரங்களைச் செய்வார். எது பிரஹ்மமென்னும் பெயருடைய ஞானம் அச்சாஸ்திரத்தை உபதேசிப்பார்" எனக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகலின், சகல சுருதி சூத்திர ஸ்மிருதி இதிஹாச புராண தாத்பர்ய விஷயரூப சமஸ்த சஜாதிய விஜாதிய ஸ்வகத பேத சத்

தை யின்றிய நித்திய சுத்த புத்த முக்த சுபாவமாயும், சச்சிதாநந்தகனமாயும், நிர்விசேஷமாயுமுள்ளது பரப்பிரஹ்மம் எனச் சித்தித்தது.

அற்றேல்,—இங்ஙனமாயினும், கேவலாத்வைதத்திற்கு வியாஸ தாத்பர்ய விஷயத்தன்மை ஸ்தாபிக்கலான், ராமாநுஜ மத்வாதி மத கண்டனத்திலும் வியாஸ மஹரிஷியின் பிரதிவாதிகளாய கபில கணாதி சூத்திரக்காரர்கட்குக் கேவலாத்வைத மதத்தை நிராகரித்துப் பேதத்தையே அங்கீகரிப்பவர்களினது மதத்தின் நிராகரணமின்றிக் கேவலாத்வைத ஸ்தாபனம் எங்ஙனமெனின், நாம் வியாஸமஹரிஷியின் பிரதிவாதி கபில கணாதி மதநிராகரணத்தின் பொருட்டுக் கேவலாத்வைதப் பிரமாணோபந்யாசத்தைச் செய்தற்குப் பிரவர்த்திக்க வின்று; பின்னையோ, கபிலாதி அநுவாத பலத்தால் வியாஸ தாத்பர்ய விஷயரூப அர்த்த நிச்சயத்தின் பொருட்டேயாம். அதை நிச்சயிக்கில்அவ்வம்மதப் பிரவர்த்தக வியாஸ சிஷ்யராகிய எல்லோராலும் கபில கணாதி மத நிராகரண பூர்வக கேவலாத்வைத ஸ்தாபனத்தில் யத்நஞ்செய்க என்னுமிதனால் எங்கட்கே நிர்ப்பந்தமின்று. மற்றும், பாஷ்ய, விவரண, வாசஸ்பத்திய, பரிமள, பஞ்சதசி பிரகரணாதிக் கிரந்தங்களிலேயே சுருதி யுக்தி அநுபவ பலத்தாற் கபில மதத்தை நிராகரணஞ்செய்து கேவலாத்வைதம் வியவஸ்தாபிக்கப்பட்டே யிருக்கின்றது.

அபேத சுருதி யுக்தி அநுபவம் போன்று பேத சுருதி யுக்தி அநுபவங்களும் இருத்தலின், கேவலாத்வைதமே சுருதி தாத்பர்ய விஷயமெனச் சூத்திர, பாஷ்யாதிக்கிரந்தங்களில் எங்ஙனம் வியவஸ்தாபிக்கட்டிருக்கின்றதெனக் கூறற்க; "ஜநங்கட்கு இரண்டாவதால்

அவசியம் பயம் உண்டாகின்றது எனச் சுருதி கூறுகின்றது. ஏகத்துவத்தைப் பார்க்கும் புருஷனுக்கு அப்பொழுது மோஹமேது? சோகமேது? எனவும், ஹே ஆஸ்திகர்காள்! அத்வைதத்தைச் சாத்விக சுருதி கூறுகின்றது. ஹே முனிசிரேஷ்டர்களே! ஏகத்துவமே வாக்கியார்த்தம்; வேறின்று. பேதத்தை விவக்ஷிக்கில் ஸ்துதி நிந்தைகள் விரோதிக்கின்றன" என்னுஞ் ஸ்ரீமத் சூத சம்ஹிதா வசநத்தாற் பேதநிந்தை பூர்வகம் அபேதம் ஸ்துதிக்கப்படுதலினாலும், அபேத சுருதிகட்குச் சட்வித தாத்பரிய லிங்காதியோடு கூடியிருத்தலிற் பிரபலத்தன்மை யுடைமையானும், "அந்த நாராயணருடைய அம்சமாய பகவான் வாதராயணர்" என்பது முதல் "சங்கரரது ஆக்ஞையால் வேதாந்த வாக்யார்த்தத்தை(பிரஹ்மசூத்திரரூபமாகச்)செய்தார்" என்பது பரியந்தமான முற்புகன்ற புராணவசநத்தால் 'அதாதோ பிரஹ்ம ஜிஜ்ஞாஸா' என்பதாதி வியாஸ சூத்திரங்கட்கே உபநிஷத் சம்பந்த பிரஹ்ம ஸ்வரூப நிர்ணய இதம் பர்யத்தாற் பிரவிருத்தி யிருத்தலானும், வியாஸ ரங்கிகரித்த கேவலாத்வைதமே சகல சுருதி மஹாதாத்பர்ய விஷயமென இச்சையின்றியவனாலும் அங்கிகரிக்கவேண்டி வருதலின்.

அற்றேல், கபில கணாத கௌதம பதஞ்சலி ஜைமினி முனிகளாகிய சர்வஞ்ஞர்களாலேயே துவைத சாஸ்திரங்களியற்றப்பட்டிருத்தலின், மிக அநுக்கிரக நியாயத்தால் அவ்வங்கிகாரார்த்தத்திற்கே கிரகிக்குந் தன்மையாகலின், வியாஸர் மாத்திரம் அங்கீகரித்த கேவலாத்வைத அங்கிகாரம் எங்ஙனம் பொருந்தும்? "நூறு குருடராலும் பார்க்கப்படுவதின்று" என்னும் நியாயத்தால், அவர்கட்குப் பிராந்தி கற்பிக்கப்படுகிற

றெனக் கூறற்க; சர்வக்ஞராய கபில மஹரிஷிகட்குப் பிராந்தி கற்பனம் உசிதமன்றாகலின் எனின், அற் றன்று; பிரகிருதி பரமாணுவாதி பின்ன பின்ன ஜகத் காரண வாதிகளாய கபில கணாதாதிகட்குப் பரஸ்பரம் விருத்த சாஸ்திரப் பிரவர்த்தகத் தன்மையான் ஒன் றென்னும் புத்தியின்மையின் மிக அநுக்கிரக நியாய முண்டாகாமையின். இதனானேயே, அபியுக்தர்களால் "கபிலர் சர்வக்ஞராகில், கணாதர் அல்லவென்பது என்ன பிரமை (ஞானம்)? அவ்விருவர்களும் சர்வக்ஞ ராயின், எங்ஙனம் மதபேதமுண்டாம்?" எனக் கூறப் பட்டிருக்கின்றது. மற்றும், "கணாத, அக்ஷபாத, வியாஸ, கபில, பதஞ்சலி, ஜைமினி தரிசனங்கள் ஆறு ஆகின்றன" என்பதாதி பிரசித்த கணாத கௌதம கபில வியாஸ பதஞ்சலி ஜைமினி சாஸ்திர சித்தாந்தங் களினது மத்தியில் ஒன்றே சித்தாந்தார்த்தம்; வியாஸ கபிலாதி சகல மஹரிஷி சம்மதம் எனக்கொள்க. இங்ஙு னம் அங்கீகரியாது பரஸ்பரம் விருத்த சகல சாஸ்திர சித்தாந்தங்களை அங்கீகரிக்கில், அவ்வியாஸ கபிலாதி சகல மஹரிஷிகட்கு ப்ராந்தியே ஆகும். அதில் எவ் வர்த்த மங்கீகரிக்கின் எல்லோருக்கும் பிராந்தியின்மை சித்திக்கும், அவ் வர்த்தமே கோடற்பாலது. ஆகவே, கபில கணாதாதி தந்திர சித்தாந்த துவைதாதி, சுருதி விருத்தமாகலின், அவற்றையங்கீகரிக்கில், அம்மஹரிஷி கட்குப் பிராந்தி வருதலால் சகல வேதாந்த தாத்பர்ய விஷயரூப வியாஸ மஹரிஷி சித்தாந்த கேவலாத்வை தமே அவ்வெல்லோருக்கும் சம்மதம் என்னு மிவ்வர்த் தத்தில் விவாத மின்று.

உண்மையிலோ கபில கௌதமாதி மஹரிஷிகட் கும் கேவலாத்வைதமே அங்கீகாரமென ஸ்ரீமத் பாகவ

தாதி புரான பர்யாலோசனையால் நிர்ணயஞ் செய்யப் படுகின்றது. அங்ஙனமே, ஸ்ரீமத் பாகவதத்தின்கண் மூன்றாவது ஸ்கந்தத்தில் "பரப்பிரஹ்மம், பரமாத்மா, பரமேஸ்வரன், புமான், பகவான் (ஆகிய ஒரு) ஞானமாத் திரமே திருசியாதி பிருதக் பாவங்களாற் சேட்டிக்கின் றது. நிர்க்குணமாயும் ஒன்றாயுமுள்ள பிரஹ்மஞானம் பாஹ்ய இந்திரியங்களால் பிராந்தியால் சப்தாதி தர்மங்க ளோடுகூடிய அர்த்தரூபத்தால் விளங்குகின்றது" என்ப தாதி முன் உதாஹரித்த வசனங்களாற் கபிலருக்குக் கேவலாத்வைதமே அங்கிகாரமென நிச்சயமாகின்றது. அவ்விதமே பிரஹ்ம வைவர்த்தத்தில் கௌதமர்—"தத் துவங்களின் பரதத்துவமாயும் தானே விளங்குங் காரணமாயும் தன்னி னந்நியமில்லாததாயும் ஜபித்தற்கு யோக்கிய ஈஸ்வர ஈசனுயுமுள்ள சம்புவின்பொருட்டு நமஸ்காரம். சித்சக்தியும் சடசக்தியும் அதன் காரியங் களும் அதன் பின்னம்; எந்தச்சொரூபம் உண்மையாக வேறாக விருப்பதின்று, அந்த அத்வைத சொரூபமா யும், ஜபித்தற்கு யோக்கிய ஈஸ்வர ஈசனுயு முள்ளவன் பொருட்டு நமஸ்காரம். எந்த உத்தம, மத்திம, அதம மாய்ப் பின்ன பின்னமாயிருக்கும் ஜீவர்கள் எக்கார ணத்தால் சாம்ப மஹேஸ்வரனி னின்றும் உண்மையாக வேறாகின்றார்க ளில்லையோ, அவ்விதச் சர்வசாக்ஷியா யுள்ள பஞ்சநதேசன்பொருட்டு நமஸ்காரம். எதன் சத் தை ஜகத்தின் சத்தை, எதன் சத்தையின்றி ஜகத்தி ன்று, எதனது விளக்கத்தால் ஜகத்து விளங்குகின்றது, எஃதின்றி ஜகத் வேறு இன்று, ஆதித்திய சோம அக்கி கள் ஏதன் விளக்கத்தால் நித்தியம் விளங்குகின்றன, அவ்வித அத்வைத சொரூபமுடைய ஜபித்தற்கு யோக் கிய ஈஸ்வரேசன்பொருட்டு நமஸ்காரம். எதன் ஆநந்

தம் சர்வாநந்தத்தையும் ஸ்வயமே விளக்குகின்றது. சர்வ ஜந்துக்களிலும் எப் பரமாநந்த சிவன் இருக்கின்ருன் அச்சர்வ சாக்ஷியாய ஜபித்தற்கு யோக்கிய ஈஶ்வரேசன் பொருட்டு நமஸ்காரம்" என்பதாதி வசனங்களால் கௌதமருக்குக் கேவலாத்வைதமே அங்கீகாரமெனக் கூறப்படுகின்றது. அங்ஙனமே, சைவத்தில் ஏகாதச ருத்திர சம்ஹிதையின் வியாஸ ஜைமினி சம்வாதத்தில்—"நான் நன்ருகச் சிக்ஷிக்கப்பட்ட தங்களது நேர் மாணுக்கன்; ஆயினும், ஹே மஹாமுனியே! எனக்கு அபரோக்ஷ ஞானமின்று. அவ்வித வெனக்கு முக்தி உபாயத்தைக் கருணையாற் சீக்கிரம் உபதேசியுங்கள். சூதர்—என ஸ்ரீமத் மஹாகருணையையுடைய உத்தம முனி வினவினர். ஜைமினியையும் என்னையும் குஹ்ய ஸ்தானத்தில் அழைத்து இதை உபதேசித்தார். வியாஸர்—ஹே வத்ஸ (குழந்தாய்)! லோகத்திலுள்ளவர்கட்கும் இதத்தைக் கொடுப்பது உன்னல் நன்கு வினவப்பட்டது. உனக்கும் அந்நியர்கட்கும் மோக்ஷத்தைக் கொடுக்கும் உபாயத்தை உனக்கு உபதேசிக்கின்றேன். சாம்பமூர்த்தியின் பிரசாதத்தால் எனக்கு அறியக்கூடாத வஸ்து இருப்பதின்று. ஞானத்தானேயே முக்தியுண்டாகின்றது; அந்நிய கோடி கர்மங்களாலன்று; வேதாந்தத்தி னின்று முண்டாகும் ஞானம் ஞானமென்றும், மற்ற தஞ்ஞானமென்றுங் கூறப்படுகின்றன. அதுவே ஜீவப்ரஹ்ம ஐக்கிய விஷயமாகின்றது; வேறன்று. அதுவும் சம்புவின் பிரசாதத்தாலும், குருவின் பிரசாதத்தாலும், அங்ஙனமே, வேதாந்த வாக்கியங்களினது தாத்பர்ய விசாரத்தாலும், அச் சிவ ஞானம் உண்டாகின்றது. வேறுவிதமாகச் சத்தியங் கூறப்படுவதின்று" என்பதாதி வசநங்களால் ஜைமினிக்

குக் கேவலாத்வைதமே அங்கிகாரமென நிச்சயிக்கப் பட்டிருக்கின்றது.

அங்ஙனமே, ஸ்காந்தத்தின்கண் சேஷ சிவ சம்வாதத்தில்—"அளவின்றிய தேசசையுடைய எனது சொரூபம் லோகத்திலுள்ளவர்கள் தம்மா லறியுந்தன்மை அதிகுஹ்யம்; உரைக்கும் என்னிடத்தினின் றும் நீ கேள். சிவன்:—இவர்கள் மாயையால் உண்டானவர்கள், பிரசன்னர்கள், கர்மத்திலிருப்பவர்கள், மரணம் சுகம் துக்கம் பயம் த்வேஷங்களை அறிகின்றார்களில்லை. கர்த்தாவால் நித்தியம் கற்பிக்கப்படுகிறது. மிருத்திகையிற் கடம்போல மாயையால் என்னிடத்துச் சிருஷ்டியாதிக் கிரியைகள் கற்பிக்கப்படுகின்றன. எனக்குச் சகளம் நிஷ்களம் என இரு ஸ்வரூபம் ஸ்மரிக்கப் படுகின்றன. சக்ஷுவாற் கிரகிக்க யோக்கியமாய சகளம் நியத ஆத்மாக்களால் தியானித்தற்கு யோக்கியம். நிராகாரம், நிரஞ்சனம், அநாமயமாய நிஷ்களமோ திருசியமன்று; தியானித்தற்கு யோக்கியமன்று. ஹேபணின்! மனிதர்களால் பார்ப்பதற்கு யோக்கியமன்று. ஆயினும், எவர்கள் துவந்துவம் அகங்காரம் கலிகல்மஷ மின்றியவர்களாய் என்னிடத்தில் மனதுடையவர்களோ, அவர்களும் புத்தியாற் பார்க்கின்றார்கள். ஹே ஆசிவிஷ! ஹே பணீந்திர! ஜ்வலிக்கும் வந்நிபோலும் நேத்திரமும், சஹஸ்த்ர சிரசையுமுடைய வுன்னைப் பார்த்து லோகத்திலுள்ளவர்கள் பயத்தாற் பீடிக்கப்பட்டவர்களானார்கள். சுத்தமான தபசே தனமும் மஹா தேசசு முடைய அத்திரி என்னும் பெயருடையவரும், அவரது அநசூயை யென்னும் பத்நியும்,உன்னைப்புத்திரனாக அடைதற் கிச்சையால் கமலம்போலும் நேத்திர முடைய வுத்பத்தி யின்றிய விஷ்ணுவை இருவர்களும்

வெகுகாலம் பூஜித்தார்கள். அவர்கட்கு, ஹே சேஷ! அக் கிருபாநிதியாகிய தேவரும் உன்னைக்கொடுத்தார். அப்பொழுது ஜன்ம பயத்தாற் பாலனையும், ஐந்து பணங்களோடு கூடியும் விளங்கும் நீ ஸ்நானஞ்செய்து சுத்தமாயிருக்கும் அவர் பத்நினியினது கராஞ்சலியில் பார்க்கப்பட்டாய். புத்திர இச்சையுடைய அவள் பயத்தால் பாலரூபத்தோடு கரத்திலிருக்கும் உன்னைப் பார்த்துப் பூமியில்விட்டாள். அவள் கரத்தினின்றும் (நீ) புவியில் விழுந்தமையின், அப்பொழுது (உனக்குப்) பதஞ்சலி என்னும் பெயருண்டாயிற்று. இப்பொழுது நீ அவ்வித ரூபத்தை அடைந்து இவ்வித ஞானத்தோடுகூடியே பதஞ்சலி என்னும் பெயரோடு பிரசித்தனாய் என்னை இருதயத்திற் சதா தியாநித்து" என்பதாதி வசநங்களாற் பதஞ்சலிக்குக் கேவலாத்வைதமே அங்கீகாரமென நிச்சயமாகின்றது. இங்ஙனமே கணாதருக்கும் கேவலாத்வைதமே அங்கீகாரமென அறிக.

ஆகலின், கபில கணாதாதிகட்குக் கேவலாத்வைதமே அங்கீகாரமாகலின், ஒருவருக்கும் பிராந்திக் கற்பனமின்று.

புகன்ற ரீதியால் கேவலாத்வைதம் கபில கணாதி அங்கீகாரமிருப்பின், அவர்கட்கு வியாஸ ரங்கீகார அத்வைத நிராகரணம் பொருந்தாமையின், கேவலாத்வைத அநுவாத பலத்தானேயே அத்வைதத்திற்கு வியாஸ தாத்பர்ய விஷயத்தன்மைச் சமர்த்தனம் பரம் நிஷ்பலமாகும் என வுரையற்க; அவர்கட்குக் கேவலாத்வைதம் முக்கிய தாத்பர்யவிஷயமாயினும் செய்ய விரும்பிய தத்தம் சித்தாந்த அபிநிவேச மாத்திரத்தால் அதன் நிராகரணம் பொருந்துதலின். வேறு காரியத்தில் அபிநிவேசமாத்திரத்தால் தம்

அங்கிகாரார்த்த நிராகரணம் அபியுக்தர்கட்கும் பார்க்கப்படுகின்றது; அன்னமன்றோ, ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீராம ஜாபாலி சம்வாதத்தில்—"அஷ்டகா சிராத்தம் ஒவ்வொரு வருஷமும் செய்யததக்கதென இந்தச் சனங்கள் பிரவிருத்திக்கின்றார்கள். அந்நத்தின் நாசத்தைப் பார். இறந்தவன் என்ன புஜிப்பான்? ஈண்டு அந்நியனால் புஜிக்கப்பட்டது அந்நியனது தேகத்தை அடையுமாயின், பிதிர்க்களை யுத்தேசித்துச் சிராத்தத்தைக் கொடுக்க. அது மார்க்கத்திற் புஜிப்ப தன்று; தானம் வாங்குதற்பொருட்டுக் கர்மத்தால் வசிய சாதனமாய் யாகஞ் செய், தானங்கொடு, தீக்ஷை செய், தபஞ்செய், திரவியங்களைவிட்டுவிடு என்பதாதி இக்கிரந்தங்கள் மேதாவிகளாற் செய்யப்பட்டன. ஹே மஹாமதிமானே! பிதிருவாக்கிய பரிபாலனம் பரலோகமல்லவென்னும் புத்தியைச் செய். எது பிரத்தியக்ஷம் அதைக் கொள். பரோக்ஷத்தைக் கொள்ளற்க. அந்தப் புத்தியைக்கொண்டு பரதனாற் கொடுக்கப்பட்ட சர்வலோக நிதர்சனமான ராஜ்யத்தை அங்கீகைக் கொள். ஸ்ரீராமர்:—'சத்தியமும் தர்மமும் பராக்கிரமமும் பூதானுக்கிரகமும் பிரியவாதித் தன்மையும் த்விஜ அதிதேவ அதிதிபூஜையுஞ் சுவர்க்கலோகத்தினதுமார்க்கங்களென்று சத்துகள் கூறுகின்றனர். ஆகலின், இங்ஙனம் விப்பிரர்கள் உண்மையான அர்த்தத்தை யறிந்து ஒரே எண்ணத்தைச் சம்பாதித்துச் சகல தர்மத்தையு முண்மையாகச்செய்து மயக்கமின்றியவர்களாய் லோகத்தினடைவை யிச்சிக்கின்றார்கள். பிதாச்செய்த கர்மத்தைக் கொள்ளாமையின், இங்ஙனம் இவ்விதப் புத்தியால் அநுஷ்டித்துச் சுத்தநாஸ்திகத் தன்மையனையும், தர்ம மார்க்கத்தினின்றும் வழுவியவனையும், விஷமத் தன்மையோடுகூடிய புத்தி யுள்ளவனையு முள்ள உன்னை

நான் நிந்திக்கிறேன். எங்ஙனம் திருடன் அங்ஙனமே அவன்புத்தி, அங்ஙனமே இவ்விடத்துப் புத்தனது நாஸ்திகத்தன்மை வந்துவிட்டதெனவறிக. ஆகலின் பிரஜைகளால் எது அத்தியந்தம் சங்கித்தற்கேடமோ அவ்வித நாஸ்திகத்தின் எதிர்ப்பட்டவர்கள் வித்துவான்களன்று; உன்னில் வேறாய்முன்னிருந்த ஜனங்களும் இப்பொழுதுள்ள ஜனங்களும் அநேக நல்ல கர்மங்களைச் செய்தார்கள். அதனால் த்விஜர்கள் சதா இவ்வுலகத்தையும் பரலோகத்தையும் ஜயித்து மங்களமான யாகத்தையும் தபசையுஞ் செய்கின்றார்கள். தர்மத்தில் ரமிப்பவர்களாயும் தான குணப் பிரதானர்களாயு முள்ளவர்கள் சத்புருஷர்களால் தேஜஸ்வித் தன்மையை நன்கு அடைகின்றார்கள். ஹிம்சை இல்லாதவர்களும் பாபமில்லாதவர்களும் லோகத்தில் பூஜிக்கத்தகுந்த பிரதான முனிகளாகின்றார்கள் எனக்கூறும் ரோஷத்தோடு கூடிய வசனத்தையும் தீனசத்துவ மின்மையையும் மஹாத்மாவாயு முள்ள ராமரைக்குறித்து விப்பிரர் மீண்டு யதார்த்தத்தையும் ஆஸ்திகத்தையும் சத்தியத்தையும் அநுநயநத்தோடு கூடிய வசனத்தையும் புகன்றார். ஜாபாலி:—நான் நாஸ்திர்களினது வசநத்தைப் புகல்வதின்று; நான் நாஸ்திகனன்று; ஒன்றுமின்று என்பது இன்று; காலத்தைப் பார்த்து முன் ஆஸ்திகனயிருந்தேன்; மீண்டும் காலத்திலேயே நாஸ்திகனுகவேண்டும். எங்ஙனம் என்னல் நாஸ்திகவசநங் கூறப்பட்டது அங்ஙனமே அவ்விக்காலமும் மெள்ள வந்துவிட்டது. ஹே ராம! உனது நிவர்த்தனத்தின்பொருட்டும் பிரசாதனத்தின்பொருட்டும் என்னல் காரணத்தால் இவ்வசநங் கூறப்பட்டது. குரோதமடைந்த ராமரையறிந்து வசிஷ்டர் சமாதானங் கூறுகின்றார். ஜாபாலியும் இவ்வுலகத்தினது சென்றதையும் வருவதையும்

அறிந்திருக்கிறார்; உன்னை நிவர்த்திக்கவேண்டுமென்னு மிச்சையுடையவராய் இவ்வாக்கியத்தைக் கூறினர்" என்பதாதி ஜாபாலி ஸ்ரீராம வசிஷ்ட வசநங்களால் உண்மையாகத் தர்மமார்க்கப் பிரவர்த்தக ஜாபாலி மஹரிஷியால் ஸ்ரீராமரை நிவர்த்தித்தற்பொருட்டு நாஸ்திக பக்ஷத்தை அவலம்பித்துத் தர்ம மார்க்கம் அநுவதித்து நிராகரிக்கப்படுங்கால் அதனினின்றுண்டாய ஸ்ரீராமர் கோபத்தின் பின்னர் அவருக்கு நாஸ்திகத்தன்மை அபாவப் பிரதிபாதனத்தால் ஜாபாலி மஹரிஷிக்கு நாஸ்திகபக்ஷ ஸ்தாபன தர்மமார்க்க நிராகரணத்தில் தாத்பர்ய மில்லாவிடினும் தர்மமார்க்க அநுவாத அம்சத்தில் தாத்பர்ய மிருத்தலின் அதுபோல் கபில கணாதிகட்குத் துவைத ஸ்தாபன அத்வைத நிராகரணத்திற் றாற்பர்யமில்லாவிடினும் கேவலாத்வைத அநுவாத அம்சத்திற் றாற்பர்யம் பொருந்துதலின். இதனால், அதனுவாத பலத்தானேயே கேவலாத்வைதத்திற்கு வியாஸ தாத்பர்ய விஷயத்தன்மைச் சமர்த்தனுடம்பரம் எங்கட்குச் சபலமேயாம்.

வேதாந்த விருத்தார்த்தத்தைப் பிரதிபாதிக்கும் கபில கணாதி சாஸ்திரங்கட்கு எக்கதி எனக் கூறற்க; வேதாந்த தாத்பர்ய விஷய கேவலாத்வைத ஞாபகத்தின் பொருட்டு அவ் வபேக்ஷித்த அசங்க உதாசீன சாக்ஷி ரூபத்தன்மைப் பதார்த்த விவேகப் பிரயோஜனத்தாற் சாங்கிய சாஸ்திரத்திற்கும், அவ் வபேக்ஷித்த யமாதி அஷ்டாங்க யோகப் பிரதிபாதகத்தால் யோகசாஸ்திரத்திற்கும், அவ் வபேக்ஷித்த சித்தசுத்தி சம்பாதக தர்ம விசார பரத்தாற் ஜைமினி சாஸ்திரத்திற்கும், அவ் வபேக்ஷித்த சோடச பதார்த்த சப்த பதார்த்தப் பிரதிபாதன பூர்வகம் தசேந்திரிய அதிரிக்த ஆத்ம

நிர்ணய அநுகூலத்தாற் கௌதம கணாத சாஸ்திரங் கட்கும் உபயோகம் பொருந்துதலின். அங்ஙனமாயின், கேவலாத்வைத ஞானஉபயோகியாய பதார்த்த மாத்திர நிரூபணமே செய்யத் தக்க தாகலின், அதன் விருத்தப் பிரபஞ்சசத்தியத்துவாதிகமும் அந்தச் சாஸ்திரங் களில் எதன் பொருட்டு நிரூபிக்கப் பட்டதெனக் கூற ற்க; வேதாந்த சாஸ்திர அநதிகாரிக ளாய மந்த மதி யுடைய புருஷர்கட்கு ஸ்தூலாருந்ததி நியாயத்தால் கிர மமாகப் பிரஹ்ம சத்தையை நிச்சயித்தற் பொருட்டே, அதன் அநுகூல சாஸ்திரப் பிரவிர்த்தி சித்தியின் பொ ருட்டு, உண்மையாகப் பிரபஞ்ச சத்தியத் தன்மை யில் லாவிடினும், அவ்வப் புருஷ வாசனையாற் சித்தித்த பிரப ஞ்ச சத்தியத் தன்மை முதலிய வுபதேசம் பிரகிருதத் தில் ஆவஸ்யக மாகலின் அதன் நிரூபணம் பொருந்து தலின்.

இங்ஙனமே, பாசுபத பாஞ்சராத்திராதி தந்திரங் கட்கும் தாத்பர்யம் அறிக; பாசுபத பாஞ்சராத்திராதி சாஸ்திர மியற்றிய சிவ விஷ்ணு வாதிகளால் சுருதிபுரா ணங்களில் கேவலாத்வைதமே ஸ்புடமாகப் பிரதிபாதிக் கப்பட் டிருத்தலால், அவ் வநுகூலத்தால் அவர்களது சாஸ்திரங்கட்கும் கேவலாத்வைத பரத்தன்மையே சித் தித்தலானும், அவற்றுள், பாஞ்சராத்ர பாசுபதாதி சாஸ் திரங்களில் கேவலாத்வைதம் ஸ்பஷ்டமாகப் பிரதிபாதி த்திருத்தலானும். இதனானே, பூர்வமே - "பரக்ஷேத்திர ஞ்ஞஆத்மாக்களி னைக்கியத்தைச் சுருதி கூறுகின்றது" என்பதாதியாற் கூறப்பட்டது. ஆகவே, அவற்றுளிருக் கும் பேத வாக்கியங்கட்கும் கேவலாத்வைத ஞான உப யோகி சிவ விஷ்ணுவாதி உபாசனா பரத்தன்மை என அறிக.

இங்ஙனமே, பௌத்த சார்வாகாதி பாஹ்ய சாஸ்திரங்கட்கும் தாத்பர்யம் அறிக; பௌத்த சார்வாகாதி பாஹ்ய சாஸ்திரங்களியற்றிய பகவான் புத்தர் பிருஹஸ்பதி முதலியோர்களால் ஸ்ரீமத் ஸூதசம்ஹிதாதி புராணங்களில்கேவலாத்வைதமே அங்கீகாரமெனப்பிரதிபாதிக்கப்படுதலான், அவர்களது சாஸ்திரங்கட்கும் அவ்விடத்திலேயே தாத்பர்ய வர்ணனம் யுக்தமாகலின். அவற்றுளிருக்கும் பிரபஞ்சசூநியத்தன்மையைப் பிரதிபாதன வசநங்கட்குப் பிரபஞ்சம் தள்ளத்தக்கது என்பதைச் சூசிப்பித்தல் வாயிலாய்க் கேவலாத்வைத ஞான உபயோகியாய வைராக்கிய சம்பாதகத்தாற் சரிதார்த்தமாகலின், பிரபஞ்ச சூநியத்தன்மையிற் றாற்பர்ய மின்மையின், தேஹாத்மவாதி விருத்தாம்சப் பிரதிபாதக வசநங்கட்கோ அநேக ஜன்மங்களிற் சம்பாதித்த பாப வாசனையாற் பீடிக்கப்பட்ட விசேஷ புருஷர்கட்குச் சீக்கிரம் தேஹவிலக்ஷண ஆத்மஞானம் பொருந்தாமையின், ஸ்தூலாருந்ததி நியாயத்தால் தேஹ விலக்ஷண ஆத்ம ஞான உபயோகியாகலின்.

அற்றேல், சகல சுருதி ஸ்மிருதி புராணாதிகளில் வைதிகத்தி னின்றும் அந்நியமான சாஸ்திரங்கள் கிரகிக்கக் கூடா வெனப் பிரதிபாதித்தலான், அவைகட்கு வேதாந்த சாஸ்திர உபயோகித்தன்மை புகல்வது யாங்ஙனம் எனின்? சத்தியம்; அச் சாஸ்திரங்களில் அவாந்தர தாத்பர்யத்தால் அச்சாஸ்திரசித்தாந்தத்தாற் பிரதிபாதிக்கப்பட்ட வேதாந்த விருத்தார்த்தத்திற்கேயே பாரமார்த்திகத்தன்மைப் புத்தியால் அவர்கட்குக் கிரகண மில்லாவிடினும், புகன்ற ரீதியால் அச் சாஸ்திரங்களையும் பரம்பரையாக வேதாந்த சாஸ்திர உபயோகி என்னும் புத்தியாற் கிரகித்தலின், அதன் உபபாதனம்

பொருந்துமாகலின். ஆதலான், பௌத்த சார்வாக பாஞ்சராத்ர பாசுபத நியாய வைசேஷிக பூர்வமீமாம்சா சாங்கிய யோக தந்திரங்கட்கும் புகன்ற ரீதியால் வேதாந்த சாஸ்திர உபயோகித்தன்மை பொருந்துமாகலின், ஓரிடத்தும் பொருத்த மின்மை யின்று.

இதனையே, ஸ்ரீமத் சூதசம்ஹிதையின் யக்ஞ வைபவ கண்டம் இருபத் திரண்டா மத்தியாயத்தில்— "ஹே முனிபுங்கவர்களே! அநந்தரம் இதனால் மார்க்க ப்ராமாணிய நிர்ணயத்தைக் கூறுகின்றேன்; சிரத்தையோடு கூடிய நீங்கள்கேளுங்கள். வேதங்களையும், தர்ம சாஸ்திரங்களையும் புராணத்தையும், பாரதத்தையும், வேதாங்கங்களையும், உபவேதங்களையும், காமிகாதி ஆகமங்களையும், காபாலத்தையும், வாதுளத்தையும், ஹே த்விஜசிரேஷ்டர்களே! அவ்விரண்டின் பேதங்களையும், பாசுபதம்சோமம்பைரவமுதலியஆகமங்களையும், அவைகளின் உபவேதங்களையும், நூறுவிதமாகவும், ஆயிரம் விதமாகவும் உள்ள விஷ்ணு ஆகமங்களையும், பிரஹ்ம ஆகமங்களையும், பௌத்த ஆகமங்களையும், ஆர்ஹத ஆகமங்களையும், லோகாயதத்தையும், அநேக விஸ்தரத்தோடுகூடிய தர்க்க சாஸ்திரத்தையும், அதிகம்பீரமான மீமாம்சையையும், சாங்கியத்தையும், யோகத்தையும், அநேக பேதத்தோடுகூடிய வேறு சாஸ்திரங்களையும் சங்கிரகமாகச் சாக்ஷாத் சர்வக்ஞ சங்கரர் செய்தார். ருத்திரருடைய பிரசாதத்தாலேயே பிரஹ்ம விஷ்ணுவாதிகள் தேவர்கள் சித்தர்கள் வித்தியாதரர்கள் யட்சர்கள் ராக்ஷசாதிகள் முனிகள் மனுஷ்யர்கள், ஹே த்விஜோத்தமர்களே! தங்கள் பாகமாகிய அவற்றையே மீண்டு விஸ்தாரமாக வாவது அல்லது சங்கிரகமாகவாவது பிரமாணமாகச் செய்கின்றார்கள் என்று

மனீஷிகளால் கூறப்படுகின்றது. ஹே த்விஜர்களே! அதிகாரி பேதத்தால், சதா ஒருவர்க்கேஅன்று. புத்தி மான்களால் இந்த மார்க்கங்கள் தர்க்கங்களால் கொல்லத்தக்கனவன்று. எங்ஙனம் ஜலப்பிரவாஹத்தினது மேலான முடிவு சமுத்திரமோ, அங்ஙனமே சர்வமார்க்கங்களினது சாக்ஷாத் ஸ்தானம் மஹேஸ்வரன். எந்த எந்தப் பிரகாரத்தால் எந்த ஜநங்களா லுபாசிக்கப்பட்டதோ அவ்வம் மார்க்க வருகுணத்தால் அவன் சாதகத் தன்மை அடைகிருன். அப்பிரசாதத்தால் கிரமமாகவும் விசிட்டமாகவும் உள்ள மார்க்கங்களை மனிதன் அடைகிருன். இவனுக்கு அவ்வவ் விடத்திலிருக்கும் தேவன் பிரசாதம் செய்கிருன்; சோபாநுக்கிரமத்தால் தேவன் வேத மார்க்கத்திற்குக் காரணம்;வேத மார்க்கத்திலிருக்கும் தேவன் சாக்ஷாத் மோக்ஷத்திற்குக் காரணம். அவற்றுள்ளும், கர்ம மார்க்கத்திலிருக்கும் அரன் ஞான சிரத்தையைக் கொடுப்பவ னுகின்ருன். ஞான பாகத்திலிருக்குஞ் சம்புவானவர் ஞான வாயிலாய் மோக்ஷத்தைக் கொடுக்கிருர். பரமுக்தி ஒரு ரூபமே. ஆகலின், அதன் விஷயமான புத்தி ஓரே ரூப மாகின்றது; நாநாரூப மாக வுண்டாவ தின்று. வேதாந்தம் சங்கரனை சாக்ஷாத் நிர்விசேஷ அத்வய ரூபத்தால் கூறுகின்றது. ஆகலின் வேறு மார்க்கத்தி னின்றும் இங்ஙனம் வேத ஜன்னிய வித்தை யின்று. ஆகலின், ஹே மதிமான்களே! வேறு மார்க்கத்தி னின்று முண்டான மதிகள் அவித்தையே; வித்தையே யன்று என நன்கு நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ஆகலின், வேறு மார்க்கங்களின் பிராமாண்யம் வேத வித்துக்கள் முக்தியி னின்றும் அன்னிய விடத்தில்,இவ்விடத்திலேயே இன்று;இவ்விடத்திற் கிரமமாக ஆத்மப்பிரமாணத்தன்மையே;இதனுல் வேதாந்த மார்க்

கத்திலிருக்கும் மஹா தேவர் சீக்கிரத்தில் முக்தியைக் கொடுக்கின்றார். அந்நியவிடத்தி லிருப்பவர் (சீக்கிரம் முக்தியைக் கொடுப்பது) இன்று. அவரும் கிரமமாகப் பரமுக்தியைக் கொடுக்கின்றார் என இச் சாஶ்வதமான சுருதி கூறுகின்றது. இதனல் மனிதன் வேதத்தை ஆசிரயிக்க; அந்நிய மார்க்கத்தை நன்ருகக் கொள்ளற்க. வேத மார்க்க மொன்றிலே யிருப்பவர்கட்கு ஒன்றும் துர்லப மின்று. இவ்விடத்திலேயே மேலான மோக்ஷம்; வே றிடத்தில் மிகுதியும் இன்று. இதனல் அதிகாரி பேதத்தால் மார்க்கம் பிரமாணம், சம்சய மின்று; ஈஶ்வரனுடைய சொரூபத்திலும், பந்த காரணத்திலும், ஜகத் காரணத்திலும், முக்தியிலும், ஞானுதியிலும், மார்க்கங்களினது எவ் விருத்தாம்சங்கள் வேதாந்தத்தாற்கூறப்படுகின்றனவோ, அவையும்மஹா மோஹத்தோடு கூடிய மந்த புத்தியையுடையவர்களது இச்சாமாத்திர அநுகுணத்தால்,பிரவிர்த்தித்தன; யதார்த்தத்தா னன்று. மனிதர்கள் திரணத்தைக் காட்டி ஓடும் பசுவை எங்ஙனம் பிடிக்கின்றார்களோ, அங்ஙனமே அவர்கட்கு மஹேஶ்வரன் இவ்வற்பத்தைப் பூர்வம் காட்டிப் புண்ணியர்களினது அநுகுணத்தால் உத்தம ஞாநத்தைக் கொடுக்கின்றார். ஆகலின், புகன்ற மார்க்கத்தோடு சிவன்கூறிய இம்மார்க்கமும் பிரமாணமே; பிரமாண மின்மையின்று. எங்ஙனம் மஹா காருண்யனும், தேவனும், சர்வஞ்ஞனும், நிர்மலனுமுள்ள சிவன் பொய் புகல்வன்? அங்ஙன மாயினும், மார்க்கங்கட்கெல்லாம் சர்வ சாதகத்தோடு கூடிய வேதமே உத்தமமாம். மார்க்கப் பிராமாண்யநிர்ணயமாகிய வெல்லாம் சுருக்கமாகக் கூறப்பட்டன. ஹே த்விஜர்களே! இங்ஙனம் அறிந்து சுருதியில் யத்நத்தாற் சிரத்தையைச்

செய்யுங்கள்" எனக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகலின், சகல சுருதி சூத்திர ஸ்மிருதி இதிஹாச புராண ஆகம சாஸ்திரங்கள் வியாஸரங்கீகாரம் கேவலாத்வைதத்தின் கண்ணேயே தாத்பர்யமென நிச்சயித்தலின், அவ்வித அத்வைதமே பரமார்த்தமெனச் சித்திக்கின்றது.

முதற் பரிச்சேதம் முற்றுப் பெற்றது.

---

## இரண்டாம் பரிச்சேதம்.

சீருறுஞ் சருவ வுலகது தமக்குச்
செப்புமா தாரமா யதுவாம்,
ஆருறு மமல குணமெலா முடைய
வப்பரப் பிரமநிர் ணயத்தை,
வருறும் பகவத் பாதசித் தாந்த
மெனுமதை நன்குகைக் கொண்டு,
பாருறு மியாரும் பரிந்துமே கொள்ளப்
பகருவ னியானுமின் புறவே.

இவ்விடத்துச் சிலர் அத்வைத வித்தியாசாரிய ராய அப்பய்ய தீக்ஷித சாணர்களினது பரம தாத்பர்ய விஷயரூப அர்த்தத்தை அறியாது அவர்க ளியற்றிய சிவதத்துவ விவேகாதிக் கிரந்தங்களைப் பார்த்து, பிரஹ்ம சிவ விஷ்ணு அபேக்ஷையால் துரிய சிவனுக்கு வியவஹார ஆதிக்கியத்தை வர்ணிக்கின்றார்கள். அவர்களின் பிராந்தி நிராசந முகத்தாற் சகுணப் பிரஹ்ம நிர்ணயத்தின் பொருட்டு இரண்டாவது பரிச்சேதம் ஆரம்பிக்கப் படுகின்றது.

அற்றேல், வியாஸ தாத்பர்ய விஷயரூப கேவலாத்வைத ஸ்வரூபம் சத்திய ஞானாநந்த ஸ்வரூபத்தை

யுடைய நிர்விசேஷப் பரப்பிரஹ்ம மிருக்குக. அதன் ஞானப் பிராப்தி எங்ஙன மெனின்,உரைப்பாம்:—“இவ்வாத்மா பிரவசநத்தாலடையத் தக்க தன்று;புத்தியானு மன்று. அநேக சிரவணத்தானு மன்று. எவனை இது பிரகாசிக்கின்றதோ அவனால் அடையத் தக்கது. அவனுக்கு இவ்வாத்மா தன் றனுவைப் பிரகாசிப்பிக்கின்றது.” ‘என க்ஷேத்திரத்தையும் ஞானத்தையும் ஞேயத்தையும் சுருக்கமாகக் கூறினேம்” என் பக்தன் இதையறிந்து என்னைப் பாவித்தற் குரியவனாகின்றான்”; “புருஷர்கட்கு ஈஸ்வர அநுக்கிரகத் தானேயே அத்வைத வாசனை மஹா பயமான சமுசாரத்தி னின்றும் இரக்ஷித்தலின், இருவர் மூவர்கட்கே உண்டாகின்றது. அரியாகிய வெனது பிரசாதத்தானேயே அத்தியந்தஞ் சுத்த சித்த முடையவர்கட்குச் சாயுஜ்ய ரூபமுக்தியில் இச்சை நன்றாக வுண்டாகின்றது. எனது பிரசாத மின்றியவர்கட்குச் சாக்ஷாத் முக்தியில் (இச்சை) உண்டாகின்ற தில்லை. வேதமார்க்க மொன்றிலே யிருக்கும் மஹாத்மாவாய எனது பக்தர்கட்குப் பிரவிருத்தி பரியந்த சிரத்தையானது சாக்ஷாத் முக்தியில் உண்டாகின்றது. ஹே சுர-சிரேஷ்டர்களே! அநேக ஜன்மங்களில் நன்கு சித்தித்த ஸ்ரௌத ஸ்மார்த்த அநுவர்த்திகட்குப் பரமாத்வைத ஞான முண்டாகின்றது. நீங்கள் முதலிய வெல்லோருக்கும் பரமாத்மாவாய சிவனது பிரசாதத்தானேயே பரமாத்வைத ஞானம்; வேறு பிரகாரத்தான் உண்டாவதின்று” என்பதாதி சுருதி ஸ்மிருதி புராணங்களில் பரமேஸ்வரப் பிரசாதத்தானேயே கேவலாத்வைத விஞ்ஞானப் பிராப்தியெனப் பிரதிபாதித்தலான், முன்னநேக ஜன்மங்களிற் செய்த புண்ணிய பரிபாக விசுத்த சித்தமுடைய புருஷனுக்குப் பர

மேஸ்வரப் பிரசாதத்தானேயே அவ்வித பிரஹ்மஞா னம் சிரவணுதி வாயிலாக உண்டாகின்றது.

பரமேஸ்வரப் பிரசாத மின்றிய வர்களாயும் கௌதம ததீசி சாபத்தாற் பீடிக்கப் பட்டவர்க ளாயும் மஹா பாப சமுத்திரத்தில் மூழ்கியிருப்ப வர்களாயு முள்ள மற்றையோர் கட்கோ, கேவலாத் வைதஞானத்தில் ருசியும் உண்டாகாது; மாருய்த் துவே ஷமே யுண்டாம். இதனையே ஸ்ரீமத் சூதசம்ஹிதை யில்—"கௌதம முனியின் சாபத்தாலும், ததீசிமுனி சாபத்தாலும், பூர்வ ஜன்மங்களி லியற்றிய பாபத்தா லும், இவ்வர்த்தம் ருசிப்ப தின்று. மஹா பாபத்தையு டையமனிதர்கட்குப் பரமாத்வைதஞானத்தில் துவேஷ முண்டாகின்றது. சாக்ஷாத் வேதத்தி னின்று முண்டா கிய சிவ னிடத்திலும்" எனக் கூறப்பட் டிருக்கின்றது. ஆகலின், கேவலாத்வைத ஞானம் பரமேஸ்வரப் பிர சாத அதீன மாகலின் அப் பிரசாதத்தின் பொருட்டு அவ் வுபாசனை அவசியம் செய்யத் தக்கது.

பரமேஸ்வரன் யார் ? எவரது பிரசாதத்தான் ஞா னத்தின் அடைவு எனின், இவ்விடத்திற் கூறப்படுகின் றது.—"பிரகிருதியை மாயை யென அறிக. மஹேஸ்வ ரனை மாயாவி என அறிக இதனி னின்றும் இச்சகத் தை மாயாவி சிருஷ்டித்தார்"; "ஈஸ்வரன் ஜகத்திற்குக் கர்த்தா; பூர்வம் தமது மாயையோடு பூர்வகற்பவாசனை யோடு கூடியே அபேதமாக விருந்தார். பிரபு பின்ன மின்றியவ ராயினும் கால கர்ம அநுகுணத்தால் தம் மோடு அபின்னமான தனது மாயையால் தமக்குப் பேதத்தைக் கற்பிக்கின்றார். ஹே த்விஜர்களே! இப்பே தம் கற்பிதமே; எப்பொழுதும் அபேதத்தைப் பாதிப்ப

தின்று. கற்பிதங்களின்மையானும் விரோதமும் சித்திப்ப தின்று. ஹேபாப மின்றியவர்களே! மீண்டும் பூர்வக்ஷண உத்பன்ன வாசனுபலத்தால் தமது பராசக்தியோடுகூடிப் பூர்வம்போ லிருந்துபார்த்தார்'' என்பதாதி சுருதி புராண பரியாலோசனையால் மாயா உபஹிதசைதன்னியமே பரமேஸ்வர னெனக் கூறப்படுகின்றது. அப் பரமேஸ்வரனுக்கே, ''எதனினின்றும் இந்தப் பூதங்க ளுண்டாகின்றன''; ''அஃது எல்லா மாவோமென ஈக்ஷித்தது''; ''எதனி னின்று மிச் சகத்திற்கு ஜன்மாதி'';''பிரகிருதியும்பிரதிஞ்ஞைதிருஷ்டாந்த அநுபரோதத்தான்'' என்பன வாதி சுருதி சூத்திரங்களால் ஜகத் ஜன்மாதி காரணத்தன்மை பிரதிபாதிக்கப்பட்டிருகின்றது; சிருஷ்டியாதிகளில் மாயாசம்பந்த மாத்திரமே பிரயோஜக மாகலின். ஜகத் ஜன்மாதி காரணத்தன்மையும் அபின்ன நிமித்த உபாதானத்தன்மையில் முடிவாகின்றது. அவ்விடத் துபாதானத்தன்மையும் தன்னிடத்தி லத்தியஸ்த சமஸ்தப் பிரபஞ்ச அதிஷ்டானத்தன்மை யெனக் கூறவேண்டும். இதுவும் பரமேஸ்வரனுக்கு அமூர்த்த வியாபக ரூபத்தானேயே பொருந்துகின்றது; விக்ரஹ உபஹித பரிச்சின்ன ரூபத்தானே பொருந்துக மின்று; விக்ரஹத்திற்குச் சர்வப் பிரபஞ்சத்தின்கண்ணும் அநுஸ்யூதத்தன்மை யின்றாகலின். அம்மாயாஉபஹிதத்திற்கே சர்வக்ஞத்துவசர்வசக்தித்துவாதி அநந்த கல்யாண குணத்தன்மையும் அங்கீகரிக்கப்படுகின்றது. ''இவனது பராசக்தி நாநாப்பிரகாரமாகக் கேட்கப்படுகின்றது, சுபாவமாயும் ஞான பலக்கிரியையாயும்'' என்னுஞ்சுருதியான். இதனுலேயே 'சர்வத்தோடு கூடியும் அது பார்க்கப்படுதலின்'' என்னு மதிகாணத்தில் ''விகாரத்தான் அன்று எனின் அது கூறப்பட்டது'' என்னுஞ்

சூத்திரத்தினது பாஷ்யத்தில் "பாணிபாத மின்றிய வன் செல்கின்றான், கிரகிக்கின்றான்; சக்ஷுவின்றிய வன் பார்க்கின்றான்; கர்ணமின்றியவன் கேட்கின்றான்" எனக் கரணமின்றிய பிரஹ்மத்திற்குச் சர்வ சாமர்த்தி யம் பார்க்கப்படுதலின் என்பதாதியால் பரமேஸ்வரனுக் குச் சரீராபேக்ஷை யின்றியும் சகல சாமர்த்தியமுமிருக் கின்றனவெனச் சித்தாந்தஞ் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகவே, முற்புகன்ற ஜகத் ஜன்மாதி காரணத்துவ ரூப லக்ஷண லக்ஷித மாயா பிம்பரூப பரமேஸ்வரனொருவ னே எல்லோராலும் உபாசித்தற்கு யோக்கியன். அவனி னின்றும் பிரதிபிம்ப சீவன் உபாசகன். அவனும் அந் தக்கரண பேதத்தால் அநேக ரூபமாக வியவகரிக்கப் படுகின்றான்; "ஒரே பூதாத்மா பூதந் தோறும் இரு க்கின்றது. ஜல சந்திரன் போன்று ஒன்றாகவும் நானாப் பிரகாரமாகவும்பார்க்கப்படுகின்றது." என்பதாதி சுருதி யிருத்தலின். பரமேஸ்வரனே ஒருவனாகவே யிருந்து கொண்டு, பக்தாநுக்கிரகத்தின்பொருட்டுத் தனதிச்சை யானேயே பிரஹ்ம விஷ்ணு வாதி லீலா விக்ரஹங்க ளைக் கிரகிக்கின்றானென அங்கீகரிக்கப் படுகின்றது.

அமூர்த்த உபாசனை உத்தம அதிகாரி விஷயமாயி னும், மாயா உபஹித அமூர்த்த பரமேஸ்வரன் மந்தாதி காரிகளினது புத்தியில் எறாமையின், அந்த உபாசனை அத்தன்மையோர்களால்செய்தற்கசக்கியமாகலின். அது ராமதாபநீயத்தில் – "சிந்மயமாயும் அத்விதீயமாயும் நிஷ்களமாயும் அசரீரியாயு மிருக்கும் பிரஹ்மத்திற்கு உபாசகர்களினது காரியத்தின்பொருட்டு ரூப கற்பனை" எனக் கூறப்பட் டிருக்கின்றது. ஞானவாசிஷ்டத்தி லும்—"புண்டரீகாக்ஷனும் தேவனன்று, திரிலோசன

னும் தேவனன்று, தேஹரூப இதுவும் தேவனன்று, சித்திர ரூபத்தையுடையதுவும் தேவனன்று, அகாரியமாயும் அநாதியும் அநந்தமும் ஞானமுமாயு மிருப்பது தேவனெனக் கூறப்படுகின்றது. சிவதத்துவத்தை அறியாத புருஷர்கட்குச் சாகாராதி அர்ச்சனை ஸ்மரணஞ் செய்யப்பட்டிருக்கின்றது. யோஜனை வழியிற் செல்ல அசக்தனுக்குக் குரோச (இருமைல்) வழி கற்பிக்கப்படுகின்றது'' எனக் கூறப்பட்டிருக்கின்றது. பாஞ்சராத்திரத்திலும்—''உனக்கு ரூபமின்று, ஆகாரமின்று' ஆயுதமின்று, ஆஸ்பதமின்று; அங்ஙனமாயினும், பக்தர்கட்கு நீ புருஷாகாரமாகப் பிரகாசிக்கின்றாய்'' எனவும், சிவாகமத்தின்கண்ணும்—''யதிகள் மந்திரிகள் ஞானிகள் யோகிகள் என்னு மிவர்களது தியான பூஜையின் நிமித்தமே இச்சையால் சரீரத்தைக் கிரகிக்கின்றான்'' எனவும் கூறப்பட்டிருக்கின்றது. இதனானே, ''அந்தம் அதன் தர்மம் உபதேசித்தலின்'' என்பதாதி அதிகரணங்களில் ''பரமேஸ்வரனுக்கும் இச்சாவயத்தால் மாயாமயம் ரூபம் சாதகர்களினது அநுக்கிரகத்தின் பொருட்டு உண்டாகின்றது'' என்பதாதி பாஷ்ய சந்தர்ப்பத்தால் சரீர மின்றிய பரமேஸ்வரனும் ஆதித்திய மண்டலாதியு ளிருக்கும் இரண்ய மயாதி புருஷ ரூபத்தால் உபாஸித்தற்கு யோக்கியன் எனச் சித்தாந்தஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

அற்றேல், ஜகத் காரணம் சதசத்ரூப சாதாரணத்தால் வாதிவிப்பிரதிபத்தி விஷயமாகலின் சூந்ய வாத வியாவிருத்தியின் பொருட்டு ''ஹே சௌமிய! சிருஷ்டிக்குப் பூர்வம் இச்சர்வ ஜகத்தும் சன்மாத்திரமாகவே யிருந்தன'' என்னுஞ் சுருதியால் சத்துரூபத்தன்மை

பிரதிபாதிக்கப்படுகின்றது. அச் சத்ரூப ஜகத் காரணத்திற்குச் சேதனசேதந சாதாரணரூபத்தால் வாதி விப்பிரதிபத்தி விஷயமாகலின், சாங்கிய வைசேஷிகாதி அங்கிகார ப்ரகிருதி பரமாணு வாதி ஜகத்காரண வாத வியாவிருத்தியின் பொருட்டு "சிருஷ்டிக்குப் பூர்வம் ஆத்மா வொன்றே யிருந்தது" என்னுஞ் சுருதியாற் சேதநத்தன்மை பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. அச் சத்ரூப சேதந ஜகத் காரணத்திற்கு ஜீவப் பிரஹ்ம சாதாரண ரூபத்தால், வாதி விப்பிரதிபத்தி விஷயமாகலின், ஹிரண்யகர்ப்ப இந்திர அக்நி சூர்யாதி ஜீவ வியாவிருத்தியின்பொருட்டு "சிருஷ்டிக்குப் பூர்வம் இவ்வொரே பிரஹ்ம மிருந்தது" என்னுஞ் சுருதியால் பிரஹ்ம ரூபத்தன்மை பிரதிபாதிக்கப்படுகின்றது. அச் சத்ரூபமாயும் சேதநரூபமாயும் பிரஹ்மரூபமாயு முள்ள ஜகத் காரணத்திற்குச்சிவ நாராயணாதிசாதாரண ரூபத்தால் வாதி விப்பிரதிபத்தி விஷயமாகலின், வியாவிருத்தியின்பொருட்டுச் சாக பசு நியாயத்தால் "எப்பொழுது இருள்; அது தினங்களு மன்று, இரவு மன்று, சத்து மன்று, அசத்து மன்று, கேவலம் சிவனே" என்னுஞ் சுருதியால் சிவரூபத்தன்மை, அல்லது, "ஒரே நாராயணன்" என்னுஞ் சுருதியால் விஷ்ணுரூபத் தன்மை இருக்குக எனின், புகலப்படுகின்றது—

இவ்விடத்துப் பேத பக்ஷத்தை ஆஸ்ரயித்துச்சிவன் அல்லது, விஷ்ணுவிற்கு ஜகத்காரணத்தன்மை கூறப்படுகின்றதா? அல்லது அபேத பக்ஷத்தை ஆசிரயித்தா? ஆதிய தன்று; முதற் பரிச்சேதத்தின்கண்ணேயே பேத சங்கையாகிய பங்கப் பிரக்ஷாளனம் செய்திருத்தலின், மீண்டு மீண்டும் அப் பேதவாதம் லஜ்ஜையை உண்டாக்குதலின். இதனானேயே இரண்டாம் பரிச்சேத

ஆரம்பத்தில் ராமாநுஜ மத்வ ஸ்ரீகண்டாதி பேதப்பிரதிபாதக பாஷ்யங்கட்கு மூல மின்றெனபதை அறிவுறுத்தற்பொருட்டுப் பகவத்பாத சித்தாந்தத்தை அநுசரித்துச் சகுணப்பிரஹ்ம நிர்ணயத்தைச் செய்கிறேன் என நம்மால் நாந்தி சுலோகத்திற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. அந்த மன்று; சாக பசு நியாய ஸ்தலத்தில் "அக்நி சோமதேவதை சம்பந்தப் பசுவைக் கொல்க" என்னு மிவ்விடத்திற், கேட்கப்பட்ட பசு சப்தத்திற்குச் சாக(ஆடு), கோ (பசு) சாதாரணத்தாற் சாமாஸியத்திற் கநுஷ்டானம் பொருந்தாமையின் அதன் அநுஷ்டானத்தின்பொருட்டு விசேஷ ஆகாங்க்ஷையில் "அக்நி சோமத்தின்பொருட்டு சாகத்தி(ஆட்டி) னது இருதயம் மேதசு" என்னுமந்திரவர்ணபரியாலோசனையால் சாமான்ய விசேஷ நியாய அவதாரத்தால் விசேஷ பரியவசான மங்கீகரிக்கினும்; பிரகிருதத்தில் அவ்வித நியாயோத்பத்தி யின்மையின், ஜகத் காரண பிரஹ்மத்திற்குத் தேவதா விசேஷ பரியவசான மின்மையின். அங்ஙன மன்றோ, "சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம்"; "ஆநந்தம் பிரஹ்மமென அறிந்தான்" என்பனவாதிசுருதியால் சச்சிதாநந்த அகண்டப்பிரமஹ்ஸ்வரூபத்தன்மை பிரஹ்மத்திற்குப் பிரதிபாதிக்கப்படுகின்றது. அப்பிஹ்ரமம் நிர்விசேஷமாகவின் ஜகத் ஜன்மாதிகாரணத்தன்மை பொருத்த மின்றெனச்செய்து, "இதனின் மாயி இச்சகத்தைச் சிருஷ்டித்தார்"; "மாயையையுடைய மஹேஸ்வரனை" என்பனவாதி சுருதியால் மாயா உபஹித வேஷத்தால் ஜகத் ஜன்மாதிகாரணத்தன்மைபிரதிபாதிக்கப்படுகின்றது. இவ்வித மாயா உபஹித பிரஹ்மத்தையே சாந்தோக்கிய ஐதரேய தைத்திரீய சாகாதிகளில் வேறு வாக்கியாபேக்ஷையின்றிபேசதாதி பதங்க

ளால் அநுவதித்து, சதாதி பதவாச்சியப் பிரஹ்மமே ஜகத் காரண மென நிச்சயித்திருத்தலின், விசேஷஆகாங்கைஷ யின்மையின் சாமான்ய விசேஷ நியாயம் இவ்விடத்தி லுசிதமே யின்று. மற்றும், அபேத பக்ஷத்தில் சிவனுக்கு, அல்லது, நாராயணனுக்கு ஜகத் காரணத்தன்மை யென்னும் விசாரமே பொருத்த மின்று; இரண்டற்கும் பேத மின்மையின். சிவநாராயணர்கட்குச்சொரூப பேத மின்றாயினும், அவர்கட்கு ஔபாதிக பேதத்தை அங்கிகரித்துச் சாக பசு நிபாப உத்பத்தியில் ஞானம் (உண்டாகின்றது) எனக் கூறற்க; உபாசனைப்பிரகரணத்தில் சிவ நாராயணர்கட்கு ஔபாதிக பேதம் லேசமும் இன்று என இதற்கு அநேகப் பிரகாரமாகக் கூறுவேவமாகலின். அங்ஙன மாயினும், சிவ நாராயணர்களில் ஒருவர்க்கு ஜீவத்தன்மையே அங்கிகரித்து அதனின் வேறாயவருக்கு ஜகத் காரணத்தன்மை யிருக்குமெனக் கூறற்க; "பிரஹ்மாவும், விஷ்ணுவும், ருத்திரரும், பின்ன மாயினும், பரமாத்ம விபாகத்தி லிருப்பவர்கள்; ஜீவ சமூகத்தி லிருப்பவர்க ளல்ல எனப் பண்டிதர்கள் கூறுகின்றார்கள்" என்பனவாதி அநேகப் பிரமாணங்களால் மும்மூர்த்திகட்கும் ஈஸ்வரத்தன்மை கூறப்படுமாகலின். மற்றும், பிரஹ்மாதி சாமான்ய சப்தங்கட்குச் சிவனிடத்திலாவது, அல்லது நாராயணனிடத்திலாவது, விசேஷ பரியவசான மெனவங்கீகரிக்கில், "சர்வ முகமாயும், சர்வ சிரசாயும் சர்வ பிடரியாயும், சர்வ பூதகுகையிலிருப்பதாயும், சர்வ வியாபியாயும், பகவானையும்; ஆகலின், சர்வ வியாபக சிவனையும், உள்ளும் வெளியும், அவ்வெல்லாவற்றையும் வியாபித்து நாராயணன் இருக்கின்றான்" என்பதாதி சுருதியால் சிவ நாராயண சப்தங்கட்கு வியாபகபரத்தன்மை கூறப்படுகின்றதா? அல்லது, "பூதயோனியாயும்,

சமஸ்த சாக்ஷியாயும், பிரபுவாயும்,சாந்தியாயும், மூன்று நேத்திரத்தையும்நீலகண்டத்தையும் உடையவனுயுமுள்ளபரமேஸ்வரனுகிய உமாசகாயனைத் தியானித்துமுனி அஞ்ஞானத்தினின்றும் வெளியிற் செல்கின்ருன்'; 'மீண்டும் அந்த நாராயணர் வேறு விஷயத்தைமனதால் தியானித்துக்கொண்டிருக்கும் அவரது லலாடத்தினின்றும் மூன்று நேத்திரத்தையும் கையிற் சூலத்தையுமுடைய புருஷன் உண்டாயினன்" என்பனவாதிசுருதிகளால் விக்ரஹவிசிஷ்டத்தன்மை புகலப்படுகின்றதா? முதலதன்று; 'சத்தியம்ஞானம்அநந்தம் பிரஹ்மம்' என்னுஞ்சுருதியிலுள்ள பிரஹ்மபதத்தானேயே சரிதார்த்தமாகலின்,பிரஹ்ம சிவ நாராயண சப்தங்கட்கு அஸ்தம் கரம் பாணியென்னுஞ் சப்தம் போன்று அவ்வியாபக சொரூப பரியாய மாகலின். விசேஷ ஆகாங்கை்ஷயின்மையாற் சாகபசு நியாயத்தின துத்பத்தியின்மையானும்,சிவ நாராயணுதி சப்தங்கட்கு ஏகார்த்த பரத்தன்மையினும், "பிரஹ்ம வித்துக்கள் கூறுகின்றனர்"; "அதாதோ பிரஹ்ம ஜிஜ்ஞாஸா"; "எப்பிரஹ்மத்தை வேதாந்த வித்துக்கள் கூறுகின்றனர்" என்பனவாதி சுருதி சூத்திர புராணங்களில் வேதாந்த வாதிகட்குப் பிரஹ்ம சப்த விபவஹாரத்திற்கே நன்கு பிரசித்த மிருத்தலானும். இரண்டாவதன்று; விற்கப சஹனம் ஒல்லாமையின். அவற்றுள்ளும், கேவல விக்ரஹத்திற்கு ஜகத் காரணத்தன்மை கூறப்படுகின்றதா? அல்லது, கேவலப் பிரஹ்மத்திற்கா? அல்லது, விக்ரஹ விசிஷ்டப் பிரஹ்மத்திற்கா? முதலதன்று; கேவல விக்ரகம் மாயா காரிய மாகலானும், சேதநத்தன்மை யின்மையால் வியாபகத்தன்மை யின்மையானும்,நிமித்த உபாதாந காரண மிரண்டு ரூபத்தன்மையும் பொருந்தாமையின். "விப்பிரர்கள் கிருத காடி

ன்யம் போன்று, கேவலம் கிருபையினுனே ஆவிர்ப்ப வித்த மஹா ஆநந்தத் தாண்டவ கருணலயத்தை" என்ப தாதி ஸ்காந்த வசநத்தை அநுஸரித்துக் கிருத கா டின்ய திருஷ்டாந்தத்தால் விக்ரஹ விக்ரகிகட்கு அபே தத்தை அங்கிகரித்து, அவ் விக்ரஹத்திற்கு ஜகத்கார ணத்தன்மையில் தோஷம் என்னை எனக் கூறற்க; விக் ரஹம் பரிச்சின்ன மாகலானும், விக்ரஹி அபரிச்சின்ன மாகலானும், அவைகளி னபேதம் கூறுதற் கசக்தமாக லின். விக்ரகமும் அபரிச்சின்னத்தில் பாதகமின்றெனக் கூறற்க; விக்கிரகம் சாவயவ மாகலின், அதற்கு அபரிச் சின்னத்தன்மை கூறுதற் கசக்த மாகலானும், "சத்துவ ரஜ தம மென்னும் பிரகிருதியினது குணங்களாகிய அவ ற்ருேடு கூடிய பரபுருஷ ஞெருவன் ஈண்டுத்திதியாதி யின் பொருட்டுவிஷ்ணு பிரஹ்மா அரன் எனச்சிரேஷ்ட மான பெயர்கள். அவற்றுள், சத்துவ சரீரத்தை யுடைய நரர்கட் காகின்றன" என்பதாதி பாகவத புரா ணுதி வசநங்களில் பகவத் விக்ரஹத்திற்கு மாயா மயத் தன்மையாற்பிரதிபாதித்தலானும். விக்ரஹ விக்ரஹிக ளினைக்கியப் பிரதிபாதக ஸ்காந்த புராணுதி வசநங் கட்குக் கதி என்னையெனக்கூறற்க; முற்புகன்ற ஸ்காந்த புராணுதி வசநங்கள் பாதிக்கப்படு மர்த்தத்தைப் பிரதிபாதித்தலான். சுவார்த்தத்திற் ருற்பரியமில்லாவிடி னும் உபாசகர்கட்கு விசுவாசத்தை உண்டாக்குவதிற் ருற்பரிய மென உரைத்தற்குச் சமாத்த மாகலின். இரா ண்டாவதன்று; அவற்றுள்ளும், மாயாதீத சுத்தப்பிரஹ் மத்திற்கு ஜகத் காரணத்தன்மை புகலப்படுகின்றதா? அல்லது, மாயா உபஹிதத்திற்கா? முதல தன்று; "இதனின் மாயி இவ் விசுவத்தைச் சிருஷ்டித்தார்",

"மஹேசுவரனை மாயாவி என" என்பதாதி சுருதி அநுஸாரத்தால் மாயா சம்பந்தமின்றி நிர்விசேஷ மாயாதீத ப்ரஹ்மத்திற்குப் பிரபஞ்ச காரணத்தன்மை யின்மையின். இரண்டாவதில், இஷ்டப்பிராப்தி யாகலானும், உன்னால் விக்ரஹ விசிஷ்டத்திற்கே ஜகத் காரணத்தன்மை அங்கீகரித்தலின் உனதநிஷ்டப் பிரசங்கம் வருதலானும். மூன்றாவது மன்று; அதன்கண்ணும், விக்ரஹ விசிஷ்டத்திற்கு நிமித்தத்தன்மை கூறப்படுகின்றதா? அல்லது, உபாதானத்தன்மை கூறப்படுகின்றதா? இரு பக்ஷத்தின்கண்ணும் சித்தாந்த ஹானிப் பிரசங்கம் வருமாகலின். சத்துவப்பிரதான மாயா உபஹித வேஷத்தாற் பிரஹ்மத்திற்கு நிமித்தத்தன்மையும், தமப்பிரதான மாயா உபகித வேஷத்தாற் பிரஹ்மத்திற் குபாதானத் தன்மையு மெனச் சகல கிரந்தக்காரர்களால் பிரதிபாதிக்கப்பட்டிருத்தலின். அது பஞ்சதசிப் பிரகாணத்தில், வித்தியாரண்ய குரு சரணர்களால்:—"எது தாமத குண மாயையைக்கொண்டு ஜகத்திற்குபாதானமும் அச்சுத்த சத்துவத்தைக்கொண்டு நிமித்தமுமோ அது பிரஹ்மமெனக் கூறப்படுகின்றது" எனக் கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனமாயின், புருஷசூக்த கைவல்ய தாபநீயாதி சுருதிகளில் விக்ரஹ விசிஷ்டத்திற்கே ஜகத் காரணத்தன்மை பிரதிபாதித்தலான், அச்சுருதிகட்குக் கதி என்னை யெனக் கூறற்க; "வேதத்தை அறிந்த பிராஹ்மணர்கள் சில வேதவாக்கியங்களை ருத்திரமூர்த்தியை ஆசிரயித்துப் பரமகாரண சிவனிடத்தில் முடிவு செய்கின்றார்கள். விப்பிரேந்திரர்கள் சில வாக்கியங்களை விஷ்ணுமூர்த்தியை ஆசிரயித்து, சில பிரஹ்ம மூர்த்தியை ஆசிரயித்து, சில வேதவாக்கியங்கள்

அக்கி மூர்த்தியை ஆசிரயித்து, முனி சிரேஷ்டர்கள் சில அக்கிய வாக்கியங்களைச் சூரிய மூர்த்தியை ஆசிரயித்து. விப்பிரர்கள் பத்துப் புராணங்களால் ருத்திரனைக் கூறுகின்றார்கள்; நான்கு புராணங்களால் பகவான் விஷ்ணு கூறப்படுகின்றார். இரண்டு புராணங்களால் பிரஹ்மா கூறப்படுகின்றார். விப்பிரேந்திரர்கள் ஒரு புராணத்தால் அக்கி, ஒரு புராணத்தால் திவாகரன். முனீஸ்வரர்காள்! இங்ஙனம் மூர்த்தியைக் கூறுதல் வாயிலாகவே சர்வ மூர்த்திகளினு மிருக்கும் மஹாதேவன் கூறப்படுகின்றான். அந்தச் சத்திபாதி லக்ஷண சிவனே சாக்ஷாத் போசகன்" என்பதாதி புகலப்படும் ஸ்காந்தாதி வசநங்களில் "பரம காரண சிவனிடத்தில்"; "சர்வமூர்த்திகளி லிருக்கும்" என்னும் உபக்கிரம உபசம்ஹார பரியாலோசனையால் மாயா உபஹித அமூர்த்த பரமேஸ்வர சம்பந்த ஜகத் காரணத்தன்மையே சிவ விஷ்ணுவாதி விக்ரஹ உபாசனையின் பொருட்டு அவ்வவ் விக்ரஹ வசிஷ்டங்களிற் புகலப்படுகின்றதெனப் புருஷ சூக்த கைவல்ய தாபனீயாதி சுருதி தாத்பர்ய வர்ணநம் பொருந்துதலானும்; விக்ரஹ விசிஷ்டத்திற்கேயே ஜகத்காரணத்திவ பக்ஷத்தில் சிவ விக்ரஹ விசிஷ்டத்திற்கு அல்லது, நாராயண விக்ரஹ விசிஷ்டத்திற்கு ஜகத் காரணத்தன்மையென விதிகாக மின்மையானும். எக்கால் சுவேதாசுவேதர அதர்வசிகாதி சுருதியால் சிவ விக்ரஹ விசிஷ்டத்திற்கே சர்வ காரணத்தன்மை அங்ஙனமே "மீண்டும் அந்த நாராயணர் வேறு விஷயத்தியானஞ்செய்புமவாதுலலாடத்தி னின்றும் மூன்று நேத்திரங்களையும் கையிற் சூலத்தையு முடைய புருஷன் உண்டாயினன்" என்பதாதி மஹோபநிஷதாதி சுருதியநுஸாரத்தால் வைஷ

ணவர்க எங்கீகரித்த விக்ரஹ விசிஷ்ட நாராயணருக்குச் சகல காரணத்தன்மை ஏன் உண்டாகாது?,"பிரஹ்மவிஷ்ணு ருத்திரேந்திரர்கள் உண்டாகின்றார்கள்; எல்லோராலும் காரணமே தியானித்தற்கு யோக்கியம்; ஐஸ்வரிய சம்பன்னனும் சர்வேசுவரனுமுள்ள சம்பு ஆகாசமத்தியில்" என்பதாதி சுருதியால் நாராயணருக்குச் சிவனிடத்தினின்றும் உத்பத்தி கூறப்படுதலின், அவருக்குச் சர்வகாரணத்தன்மையின்றெனக் கூறற்க;"நாராயணனினின்றும் ருத்திரன் உண்டாயினன்" என்பதாதி சுருதியால் சிவனுக்கும் நாராயணனினின்றும் உற்பத்தி கூறப்படுதலின். அவருக்கும் சர்வகாரணத்தன்மைப் பொருத்தம் சமானமாகலின். ஆகலின், விநிகமனமின்மையான் சிவ விஷ்ணுவாதி அபின்ன நம தங்கீகார மாயா உபஹித அமூர்த்த பரமேஸ்வரனே சர்வ காரணம் எனக் கொள்க. இதனால், "பிரஹ்ம விஷ்ணு ருத்திரேந்திரர்கள் உண்டாகின்றார்கள்" என்னுஞ் சுருதியால் பிரஹ்மாதி மும்மூர்த்திகளினது உத்பத்தியைப் பிரதிபாதித்தலின், அவர்கட்கு ஜீவபாவமே, பிரஹ்ம பாவமின்மையின், எங்ஙனம் உபாஸித்தற்கு யோக்கியம் என்னும் சங்கையும் நிவர்த்தியாகிவிட்டது.

இப் புருஷனுக்கு நாபியும், இருதயமும், கண்டமும், சிரசும் என நான்கு ஸ்தானங்களுண்டாகின்றன. "இதில் நான்கு பாதங்களையுடைய பிரஹ்மம் விளங்குகின்றது. ஜாக்ரத்தில் பிரஹ்மா, ஸ்வப்நத்தில் விஷ்ணு, சுழுப்தியில் ருக்திரன், துரியத்தில் அக்ஷரம்" என்னும் பிரஹ்மோபநிஷகாதி வசநத்தால் "ஒரே சிவன் சாக்ஷாத் சிருஷ்டி ஸ்திதி சம்ஹார சித்தியின் பொருட்டுக் கற்பனையாகிய பிரஹ்ம விஷ்ணு சிவனென்னும்

பெயர்களால் வெளிப்படுகின்றனன்"; "பிரஹ்மாவும், விஷ்ணுவும், ருத்திரனும் பின்னர்களாயினும் பரமாத்மாவின் விபாகத்தி லிருப்பவர்கள்; ஜீவ சமூகத்தி லிருப்பவர்களன்று எனப் பண்டிதர்கள் புகல்கின்றனர். புண்ணிய பாபங்களோடு கூடியும், ராகத்வேஷங்களாகிய மலத்தோடு கூடியும், ஜன்ம நாசத்தால் அமிழ்த்தப் பட்டும், சதா சம்சாரியாயும், அவசமாயும் இருப்பவர்கள் ஜீவர்கள். ஹே த்விஜ சிரேஷ்டர்களே! ஆவிர்ப்பாவ விசேஷணங்களை யுடைய பிரஹ்ம விஷ்ணு மஹேசர்கட்குப் புண்ணிய பாபங்களுண்டாவன வல; அவர்கட்குப் பரதத்துவத்தின் ஆக்ஞையால் ஜீவர்கட்கு ஹிதத்தைக் கொடுத்தற்பொருட்டுக் கேவலம் ஆவிர்ப்பாவ திரோபாவங்கள். ஹே ஆஸ்திகர்களே! நல்ல விரத முடையவர்களே! விஷ்ணு பிரஹ்மா சிவனாகிய அவர்களது ஆவிர்ப்பாவங்களும் சதா ஸம்சாரியாகிய ஜீவர்களால் போக மோக்ஷத்தின் பொருட்டு உபாஸித்தற்கு யோக்கியமே. அப் பகவான் ஜனார்த்தனன் ஒருவனே சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரத்தைச் செய்யும் பிரஹ்ம விஷ்ணு சிவ னென்னும் பெயரை அடைகின்றான்"; "சத்துவ ரஜஸ் தம சென்னும் பிரகிருதியின் குணங்களாய அவற்றோடுகூடி பரபுருஷன் ஒருவனே ஈண்டு சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரத்தின் பொருட்டு விஷ்ணு பிரஹ்மா சிவன் என்னும் சிரேஷ்டமான பெயர்களை அடைகின்றான்; அவற்றுள், சத்துவ சரீரம் ஜீவர்கட்கு ஆகின்றன" என்பனவாதி சூத சம்ஹிதை, விஷ்ணு புராண, பாகவத வசநங்களாலும் பிரஹ்மாதி மும்மூர்த்திகட்கும், பிரஹ்மகோடித்தன்மையும், முமுக்ஷு உபாஸ்யத்தன்மையும், ஆவிர்ப்பாவ

திரோபாவாதிகமும் பிரதிபாதித்தலின். ஜீவத்தன்மையும், அநுபாஸ்பத்தன்மையும் ஜன்யத்தன்மையு மின்றாகலின், அச் சங்கையின் அங்குர உத்பத்தி அவகாசமின்மையின். ஆகவே, மாயா உபஹித ஜகத் காரண ஒரே பரமேஸ்வரனுக்கே தனது மாயையிலுள்ள சத்துவாதி குணோபாதிகளால் தன திச்சையானேயே பிரஹ்மாதி மும்மூர்த்தி ரூபத்தால் ஆவிர்ப்பாவம் அங்கிகரித்தலின், "பிரஹ்ம விஷ்ணு ருத்திர இந்திரர்கள் உண்டாகின்றார்கள்" என்னுஞ் சுருதிக்கு அவ்வித ஆவிர்ப்பாவ பரத்தன்மையே அங்கீகரிக்கப்படுகின்றது.

அற்றேல், "எல்லோராலும் காரணமே தியானத்திற்கு யோக்கியம்; ஐஸ்வரிய சம்பன்னனும், சர்வேசுவரனுமுள்ள சம்பு ஆகாச மத்தியில்" என்பதாதி சுருதி பலத்தால் சிவனுக்கே சர்வ காரணத்தன்மையிருக்குக. "நாராயணனி னின்றும் ருத்திரன் உண்டாகின்றான்" என்னுஞ் சுருதிக்குக் குணமூர்த்தி சிவ பரத்தன்மையாற் துரியசிவனுக்குச் சர்வ காரணத்தன்மையிற் பாதக மின்மையின் எனின்; அவற்றுள், விக்ரஹ உபஹித ரூபத்தால் துரீய சிவனுக்குச் சர்வ காரணத்தன்மை கூறப்படுகின்றதா? அல்லது, அதன் உபலக்ஷித ரூபத்தாலா? முதற்கற்பம் கற்பங்களினது இருதயா கல்பத்தை அற்பமும் கல்ப்பிப்ப தின்று; துரீயவிக்ரஹமும் சாவயவமாகலின், காரியத்தன்மை அவசியம் பாவியாகலின்; அவ்விடத்தின்கண்ணும் விக்ரஹ உபஹித வேறு காரண அபேக்ஷையில் அநவஸ்தைப் பிராப்தியான். அநாதியே பரமேஸ்வரனது ஒரு விக்ரஹமிருக்கின்ற தெனக் கூறற்க; விக்ரஹ மாத்திரத்திற்கு

மாயா ஜன்ய மாகலின், அநாதித்தன்மையிற் பிரமாண மின்மையின்; "பாணி பாத மின்றியவன் செல்கின்றான்; கிரகிக்கின்றான்; சக்ஷுஸ் வின்றியவன் பார்க்கின்றான்; கர்ண மின்றியவன் கேட்கின்றான்"; "விகாரத்தான் அன்று எனின், அது கூறப்பட்டது"; "காரண மின்றிய பிரஹ்மத்திற்கும் சர்வ சாமர்த்தியம் பார்க்கப்படுகின்றது" என்பனவாதி சுருதி சூத்திர பாஷ்ய விரோதம் வருமாகலானும், விக்ரக உபஹிதரூபத்தால் பரமேஸ்வரனுக்கு நிமித்த உபாதானத் தன்மை இன்றெனப் பூர்வமே நிராகரணஞ் செய்யப்பட்டமை யானும். இரண்டாவதில், விக்ரஹ உபலக்ஷித ரூபத்திற்கேயே நாங்க ளங்கிகரித்த மாயா உபஹித சைதன்ய ரூபத்தால் கட்டகுடிப் பிரபாத விருத்தாந்த நியாயத்தால், அதற்கே சகல காரணத்தன்மையென நாம திஷ்டசித்தியே யாகும்.

அற்றேல், இங்ஙன மாயினும் ஜகத் சிருஷ்டியாதியின் பொருட்டுத் துரிய விக்ரஹ மங்கீகரியாவிடினும் "காரணமோ எல்லோராலும் தியாநித்தற்கு யோக்கியம்; ஐச்வரிய சம்பன்னனும் சர்வேசுவரனுமுள்ள சம்பு ஆகாச மத்தியில்" என்னும் அதர்வசிகை வாக்கிய அநுஸாரத்தால் உபாஸனையின் பொருட்டுத் துரிய பரமேஸ்வர சிவமூர்த்தியை அங்கிகரியுங்கள்; இதனானேயே பிரஹ்மாதி மும்மூர்த்தி அபேக்ஷையால் துரீய மூர்த்தி விசிஷ்ட பரமேசிவனுக்கு உத்கருஷமு முண்டாகின்றதெனின், கூறப்படுகின்றது:—அதர்வசிரசில் - "ஈசானனைத் தியானிக்க;இச்சர்வம் பிரத்தியாயிக்க;எதனினின்றும் பிரஹ்ம விஷ்ணு ருத்திரேந்திரர்கள் உண்டாகின்றனர். பூதங்களோடுகூடச் சர்வேந்திரியங்க

ளும். அது காரணங்கட்குக் காரணம், தாதா, தியாதா; காரணம் எல்லோராலும் தியானித்தற்கு யோக்கியம் ஐஸ்வரிய சம்பன்னனும் சர்வேசுவரனு முள்ள சம்பு ஆகாச மத்தியில்" என்னு மிவ்விடத்தின்கண் "ஈசானனைத் தியானிக்க"; 'காரணமோ தியான யோக்கியம்" என்பனவாதியால் ஈசானாதி சப்தவாச்சிய ஜகத் காரண ரூப பரமேஸ்வரனுக்குத் தியான யோக்கியத் தன்மை விதிக்கப்படுகின்றது. காரணத்தன்மையும் அவனுக்கு மாயா உபஹித அமூர்த்தரூபத்தானேயே யென நம்மால் பூர்வம் பிரதிபாதிக்கப்பட் டிருக்கின் றது. அதன் அநுஸாரத்தால் "சம்பு ஆகாச மத்தி யில்"; "சிவன் ஒருவனே தியானித்தற்கு யோக்கியன்" என்னு மிவ்விடத்தின்கண்ணும் சம்பு சிவாதி சப்தங் கட்கும் அமூர்த்த பரசிவ பரத்தன்மையே அங்கீகரி த்து, அவ்வித சிவனுக்கே தியானித்தற்கு யோக்கியத் தன்மை விதிக்கப்படுகின்ற தெனக்கொள்க. ஆகவே, அதர்வசிகை உபநிஷத்துக்கள் அவ்வித பரமேஸ்வர னுக்குத் தியான யோக்கியத்தன்மைப் பிரதிபாதன மாத்திர தாத்பரிய முடைய தாயினும் துரியமூர்த்திப் பிரதிபாதனத்திற் றாற்பரியஞ் சித்திப்ப தின்று. எக் கால், "மூன்று நேத்திரங்களையுடைய உமாசகாய விபுவாய பரமேஸ்வரனே" என்பதாதி கைவல்ய சுருதி யின்கண் உமாசகாயத்தன்மை, மூன்று நேத்திரத்தன் மை, நீலகண்டத்தன்மை முதலிய குண விசிஷ்ட பர மேஸ்வரனுக்கே தியான யோக்கியத்தன்மை அறியப் படுதலின், அத னநுரோதத்தால் குணோபசம்ஹார நியாயத்தால், அவ்விடத்தின்கண்ணும் அவ்வித சிவ னுக்கே தியான யோக்கியத்தன்மை கற்பிக்க எனக்

கூறப்படுகின்றது. அங்ஙன மாயினும், அவ்வித குண மூர்த்தி சிவ ரூபத்தால், அல்லது, உபாசனைபின்பொருட்டு ஆரோபித்த அவ்வித சிவரூபத்தால், பரமேஸ்வர உபாசனை பொருந்தா மாகலின், அதன்பொருட்டுத் துரிய மூர்த்தி கற்பனை யின்று. அல்லது, ''ஈசானனைத் தியானிக்க'' என்று மிவ்விடத்தில் குண மூர்த்தி சிவனுக்கே தியான யோக்கியத்தன்மை விதித்து, அதன் நிர்வாஹத்தின்பொருட்டு உபாஸ்யரூப குணமூர்த்தி சிவனுக்குப் பரப்பிரஹ்மத்தன்மை அறிவுறுத்தற்பொருட்டு ''காரணமோ தியானித்தற்கு போக்கியம்'' என்பதாதியால் அமூர்த்த பரமேஸ்வரரூபத்தால் வியவஸ்தாபித்து, காரணத்துவ சர்வேசுவரத் துவாதிகமும் அதனபின்னத்தால், குணமூர்த்தி சிவனிடத்திலும், பிரபாதிக்கப்பட் டிருக்கின்றது. ''பிரஹ்ம விஷ்ணு ருத்திர இந்திரர்கள் உண்டாகின்றனர்'' என்னுஞ் சுருதி பரமேஸ்வரன் தன திச்சையானே ஆவிர்ப்பாவ பரத்தன்மையானும் பொருந்துதலின், அவனுக்கே குணமூர்த்தி ரூபத்தால் ஆவிர்ப்பாவமும், அமூர்த்த ரூபத்தால் காரணத் தன்மையும் அவிருத்தமாகலின், ஓரிடத்தும் பொருத்த மின்மை யின்று. இங்ஙனமே ஸ்காந்தாதி சிவ புராணங்கட்கும் தாத்பர்ய மறிக. இதனானேயே ஸ்காந்தத்தில் ''வேதத்தை அறிந்த பிராமணர்கள் சில வேத வாக்கியங்களை ருத்திர மூர்த்தியை ஆசிரயித்துப் பரமகாரண சிவனிடத்தில் முடிவு செய்கின்றார்கள். விப்பிரேந்திரர்கள் சில வாக்கியங்களை விஷ்ணு மூர்த்தியை ஆசிரயித்து, சில பிரஹ்ம மூர்த்தியை ஆசிரயித்து, வேத வாக்கியங்களை அக்நிமூர்த்தியை ஆசிரயித்து, முநிசிரேஷ்டர்கள் சில அந்நிய வாக்கியங்

களைச் சூரியமூர்த்தியை ஆசிரயித்து. விப்பிரர்கள் பத்துப் புராணங்களால் ருத்திரனைக் கூறுகின்றார்கள். நான்கு புராணங்களால் பகவான் விஷ்ணு கூறப்படுகின்றார். இரண்டு புராணங்களால் பிரஹ்மா கூறப்படுகின்றார். விப்பிரேந்திரர்கள், ஒரு புராணத்தால் அக்நி, ஒரு புராணத்தால் திவாகரன். முனீஸ்வரர்காள்! இங்ஙனம் மூர்த்தியைக் கூறுதல் வாயிலாகவே சர்வமூர்த்திகளினு மிருக்கும் மஹாதேவன் கூறப்படுகின்றான். அந்தச் சத்திபாதி லக்ஷண சிவனே சாக்ஷாத் மோசகன். ஹே த்விஜர்காள்! பிரஹ்ம விஷ்ணு மஹாதேவர்களால் சதா உபாஸித்தற்கு யோக்கியன்" என முற்புகலப்பட்டன. இவ்விடத்துப் பிரஹ்ம விஷ்ணு வாதி மூர்த்தி விசிஷ்டரூபத்தால் பரமேஸ்வர உபாசனையின் பொருட்டுப் பிரஹ்மாதி சகல மூர்த்தியில் அநுஸ்யூத ஜகத்காரணரூப மாயாஉபஹித அமூர்த்த ரூப பரமேஸ்வரனை பரமசிவ மஹாதேவாதி சப்தத்தாற் கூறப்படுபவனைப் சில வேதாந்தங்களாலும், சில புராணங்களாலும், ருத்திரமூர்த்தி விசிஷ்டரூபத்தாலும், சில விஷ்ணு மூர்த்தி விசிஷ்டரூபத்தாலும், சில பிரஹ்மமூர்த்தி விசிஷ்டரூபத்தாலும், சில அக்நிசூரியமூர்த்தி விசிஷ்டரூபத்தாலும் பிரதிபாதிக்கப்படுகின்றதென்னு மிவ்வர்த்தம் அறியப்படுகின்றது ஆகவே, சிவபரத்தாற் பிரசித்தமான கைவல்ய அதர்வசிகாதி சுருதிவாக்கியங்களும், ஸ்காந்த சைவாதி புராணங்களும், குணமூர்த்தி சிவரூபத்தால் பரமேஸ்வர உபாசனையின் பொருட்டே, மாயா உபஹித அமூர்த்த பரமேஸ்வரனிடத் துள்ள ஜகத் காரணத்துவாதிகம், குணமூர்த்தி சிவனிடத்திலும் பிரதிபாதிக்கப்படுகின்றன வெனத் தாத்பர்யம்

ஸ்பஷ்டமாகின்றது. இதனாலேயே, ஸ்ரீமத் விஷ்ணு பாகவதத்தின்கண் நான்காவது ஸ்கந்தம் அத்திரி மஹா ரிஷி தபச்சரியா ப்ரகரணத்தில் "முனி நூறுவருஷம் பிராணாயாமத்தால் மனதை அடக்கித் துவந்துவமின்றி வாயுவைப் புஜித்துக்கொண்டு ஒரே பாதத்தால் நின்றார். எவன் ஜகத்திற்கீஸ்வரனோ அவன் சரணத்தை நான் அடைகின்றேன். தனக்குச் சமானமான பிரஜையை என்பொருட்டுக் கொடுப்பான் எனச் சிந்தித்துக் கொண்டு" என ஆரம்பித்து "ஜகத் உத்பத்திஸ்திதி லயங்களில் பகுக்கப்பட்ட மாயா குணங்களால் ஒவ்வொரு யுகத்திலும் கிரகிக்கப்பட்ட தேஹத்தை யுடைய பிரஹ்ம விஷ்ணு ருத்திரர்கள் நீங்கள், உங்கட்கு நமஸ்காரஞ் செய்கின்றேன். உங்களுள் எப்பகவானை இங்கு நான் அழைத்தேன். புத்திர சந்தானத்தின் பொருட்டு என்னால் நாநாவித உபசாரங்களால் ஒரே பகவான் தியானஞ் செய்யப்பட்டான். ஜீவர்களினது மனதிற்கும் தூரமான நீங்கள் எங்ஙனம் இங்கு வந்தீர்கள்? சொல்லுங்கள். அநுக்கிரகஞ் செய்யுங்கள். இஃது எனக்குப் பெரிய ஆச்சரியமாயிருக்கின்றது. மைத்திரேயர் :—ஹே! பிரபுவாய விதுர! என்னும் அம்முனிவரது வசநத்தைக் கேட்டு அந்தத் தேவ சிரேஷ்டர்களாகிய மூவர்களும் அந்த ரிஷியைச் சந்தோஷிப்பித்து மனோஜ்ஞமான வாக்கினால் சமாதானங் கூறுகின்றார்கள். தேவர்கள் :—ஹே! பிரஹ்ம ரிஷியே! நீர் எங்ஙனம் சங்கற்பஞ் செய்தீரோ அங்ஙனமே உண்டாம்; வேறு பிரகாரமாக உண்டாகாது சத்திய சங்கற்பமுடைய நீர் எதைத் தியானஞ் செய்தீர், அதுவே நாங்கள். உமக்கு லோகப்பிரசித்த எங்களம்ச

ரூபமாகிய புத்திரர்கள் உண்டாவார்கள். ஹே முனிவரே! உமக்கு மங்களமு முண்டாகுக. உமது கீர்த்தியை விஸ்தாரஞ் செய்வார்கள். தேவ சிரேஷ்டர்கள் இங்ஙனம் இச்சித்த வரத்தைக் கொடுத்துவிட்டு அவ்விடத்தினின்றும் நீங்கினர்கள்" என்பது பரியந்தமான வசநங்களால் ஒரே ஜகதீஸ்வரனை உத்தேசித்துப் புத்திரன்பொருட்டுத் தப மியற்றிய சத்திய சங்கற்பமுடை அத்திரி மஹரிஷிக்குப் பிரஹ்ம விஷ்ணு ருத்திர ரூப மும்மூர்த்தி ரூபத்தானையே ஜகதீஸ்வரர் பிரசன்னமாய் அவ ரிச்சித்த வரத்தைக் கொடுத்துத் தமது ஸ்தானத்திற்குச் சென்றார் எனப் பிரதிபாதித்தலின், மும்மூர்த்தியின் வேறாய்க் காரணரூப வேறு மூர்த்தி ஜகதீஸ்வரருக்கின்றெனத் தாத்பர்யம் ஸ்பஷ்டமாகின்றது.

அற்றேல், இங்ஙனமாயின், "அரூப சிவனுக்கும் உபாசகர்களால் தியானித்தற்கு யோக்கிய மூர்த்தியிருக்கின்றது. சுத்த திரிநேத்திர சந்திரசேகர நீலக்கிரீவ பரமானந்தப் பிரபோத தாண்டவப் பிரிய உமார்த்த விக்ரஹம் குண மூர்த்திகளாய பிரஹ்ம விஷ்ணு மஹாதேவர்களால் உபாஸித்தற்கு யோக்கியம்; சர்வ மூர்த்தி ரகிதமாயும், சர்வ பூத அதிபதியாயும். அங்ஙன மாயினும், இது மேலான மூர்த்தியென இச் சாஸ்வத சுருதி" என்பதாதி ஸ்காந்த வசநங்களில் துரீய சிவ மூர்த்திக்குக் குண மூர்த்திகளா லுபாஸியத்தன்தமைப் பிரதிபாதனம் பார்க்கப்படுதலின், அவ்வித வசநங்கட்குக் கதி என்னை எனின், அற்றன்று; ஸ்மிருதி புராணதி அஷ்டாதச வித்தைகட்கு வேத மூலத் தன்மையாற் பிரவிர்த்தி

யிருக்கினும், சிற் சில விடங்களில் வைதிக விருத்த சைவ வைஷ்ணவாதி ஆகம அநுஸாரத்தால் அவ்வித அதிகாரியைக் குறித்துப் பிரவிர்த்தியாகலின்; வைதிகர்கட்கு அவ் வம்சம் கிராகிய மன்றெனப் புராண வசநங்களானேயே அவ்வவ் விடத்து வியவஸ்தை செய்யப்பட்டிருத்தலின். அது ஸ்ரீமத் சூதசம்ஹிதையில்—"பரமேஸ்வர ஞானத்தாற் சம்சார பந்தத்தினின்றும் விடுபடுகின்றான், பரமேஸ்வர ஞானமும் வேதத்தானேயே, அந்நியத்தா னன்று. ஹே ஆஸ்திகர்களே! வேறு ஆகமத்தி னின்று முண்டாம் ஞானம் ஞானமன்று. ஞான சிரேஷ்டர்கள் அஷ்டாதச வித்தைகட்கும் வேதத்தால், அந்நிய வித்தைகள் வேத அநுஸாரத்தால் பிரவிர்த்திக்கில் சர்வ சோபையுடனிருக்கும். அங்ஙன மாயினும், அவ் வெல்லாவற்றினும் சில அம்சம் சிற் சில விடத்தில் சைவாகம அநுஸாரத்தாலும், அதன் பேத அநுஸாரத்தாலும், விஷ்ணுவாகம அநுஸாரத்தாலும், அதன் பேத அநுஸாரத்தாலும், பிரஹ்மாகம அநுஸாரத்தாலும், அதன் பேத அநுஸாரத்தாலும், அதிகாரி பேதத்தாலும் கிரமமாக முக்தியின் பொருட்டுப் பிரவர்த்திக்கின்றது. ஹே முனி சிரேஷ்டர்களே! சத்தியமே என்னாற் கூறப்பட்டது. முனி சிரேஷ்டர்களே! அவ்வத் தந்திரங்களில் எந்த ஜீவர்கள் நிக்ஷிக்கப்படுகின்றார்களோ, அவர்களானேயே அந்த அம்சமானது கிரகித்தற்கு யோக்யம். சர்வப் பிரகாரத்தாலும் வைதிகர்களால் கிரகிக்கக் கூடாது" எனக் கூறப்பட்டிருக்கின்றது. சௌர சம்ஹிதையினும்—"எவ் வேத விருத்தாம்சம் சர்வ புராணங்களினும், அவ் வம்சத்தை எல்லாவிதத்தாலும்

எல்லோராலும் பரித்தியாகஞ் செய்க. தந்திர அவலம்பனத்தானேயே புராணங்களும் சில சாக்ஷாத் வேத விருத்தார்த்தத்தைக் கூறுகின்றன; சிற் சில விடத்து அதிகாரி பேதத்தானும். வேத பரனைக் குறித்தே அன்று" எனக் கூறப்பட்டிருக்கின்றது.

அல்லது துரீய சிவ மூர்த்தியிருக்குக; அங்ஙனமாயினும், குண மூர்த்தி அபேக்ஷையாற் றுரீய மூர்த்தி விசிஷ்டத்திற்குச் சிரேஷ்ட மென்னு மிது பொருத்தமன்று; துரீய மூர்த்தி போன்று குண மூர்த்திகட்கும் பரமேஸ்வர மூர்த்தித்தன்மையால், அதன் அநுஸ்யூத பரமேஸ்வரன் ஒன்றாகலின் தர தம பாவம் பொருந்தாதாகலின். பரமேஸ்வர விக்ரஹம் குண மூர்த்தி ஆவிர்ப்பாவ காரண மாகலின், பிரஹ்மாதி அபேக்ஷயால் பரம சிவனுக்கு உத்கருஷ மெனக் கூறற்க; சர்வ பரமேஸ்வர மூர்த்திகட்கும் ஈஸ்வரோபாதி ரூப மாயா மாத்திரம் நிமித்த மாகலின், துரீய மூர்த்தி போன்று குண மூர்த்திகட்கும் தம திச்சா கற்பித மாகலின். அல்லது, குண மூர்த்திகட்குத் துரீய விக்ரஹத்தி னின்றும் ஆவிர்ப்பாவ மிருக்குக; அங்ஙனமாயினும், பொருத்த மின்மை யின்று: எங்ஙனம் ராமாநுஜ மதத்திலும் ராம கிருஷ்ணாதிகட்கு நாராயண ஆவிர்ப் பாவ ரூபமாயினும், நாராயண அபேக்ஷயால் அவர்கட்கு உத்கருஷம் இன்று; அது போன்றே பிரஹ்மாதி மூர்த்திகட்குப் பரமசிவ அபேக்ஷயால் அபகர்ஷம் (தாழ்வு) இன்று இங்ஙனம் கொள்ளாக்கால், "நாராயணனி னின்றும் ருத்திரன் உண்டாகின்றனன்" என்பதாதி சுருதியால் ருத்திரனுக்கு நாராயணனி னின்றும் ஆவிர்ப்பாவம் பிரதி பாதித்தலாற்,

சைவ மதத்தில் ருத்திரனுக்கு நாராயண அபேக்ஷை யால் அபகர்ஷம் பிராப்தமாகு மாகலின். இஷ்டப் பிராப்தி யெனக் கூறற்க; பரமசிவ வாதிகளால் ருத்தி ரனுக்கு நாரயண அபேக்ஷையால் உத்கர்ஷமே அங்கி கரித்தலின். அற்றேல், விஷ்ணு சிவன்கட்கு ஈஸ்வர பாவம் பொருந்து மாயினும், சதுர்முகப் பிரஹ்மா விற்கு ஜீவ சமஷ்டிரூப ஹிரண்யகர்ப்பத்தாற் பிரசித்த மாகலின்; ஈஸ்வர பாவ மெங்ஙனம் எனின், அற் றன்று; "முனி சிரேஷ்டர்களே! பிரகிருதியாகும் இப் பௌதிகங்களி னின்றும் பூதங்கள் உத்கிருஷ்டங்கள். அவைகளி னின்றும் சேதந ப்ரபு ஜீவாத்மா சமஷ்டி வியஷ்டி பாவத்தாற் சிரேஷ்டம். அவ் வியஷ்டி சமஷ்டி யும் பரஸ் பரம் பின்னம். அவையும் பாவ(ன) அநு சாரத்தால் தேவ திரியக் மனுஷ்யாதி சரீரத்தை யடை கின்றன. தேவர்காள்! இவைகளுள் சமஷ்டிரூபஞ் சர்வ ரூபத்தால் சிரேஷ்டம். அதனினின்றும் பிரஹ்மா வின் சகல விபூதிகளும் சிரேஷ்டம். முனீஸ்வரர்களே! எங்ஙனம் ஜீவர்கள் அங்ஙனமே அவைகளும் பரஸ்ப பரம் விசிஷ்டங்கள் ஆகின்றன. அவைகளுள் பிரஹ்மா அதிகம். அதனினின்றும் விஷ்ணு சிரேஷ்ட மெனக் கூறப்படுகின்றது. அதுவும் தனது வியஷ்டி பூதங் களினின்றும் சிரேஷ்ட மெனக் கூறப்படுகின்றது; அதனி னின்றும் ருத்திரன் அதிகம். அதுவும் வியஷ்டியி னின்றும் அதிக மென ஸ்மரிக்கப்படுகின்றது. பிரஹ் மாவும், விஷ்ணுவும், ருத்திரனும் பரதந்திரவ விபூதி கள். அம்மூன்றற்கும் அதிகம் சர்வ காரண வீஸ் வரன்; அதனினின்றும் அதிகம் ஞானம் ஆநந்தம் அத் வயம் பரம் தத்துவம்" என்பதாதி ஸ்ரீமத் சூதசம்ஹி தாதி வசநங்களில் "இவைகளுள் சமஷ்டி ரூபம்"

என்னுமிதனுல் தேவ திரியக் மனுஷ்யாதி சகல ஜீவ சமஷ்டி ரூபத்தால் இரண்யகர்ப்பற்குச் சமஷ்டி ஜீவத்தன்மை பிரதிபாதித்து "அதனினின்றும் பிரஹ்மாவின் சகல விபூதிகளும் சிரேஷ்டம்"; "அவைகளுள் பிரஹ்மா அதிகம்" என்னுமிவற்றால் இரண்யகர்ப்ப அபேக்ஷையால் மும்மூர்த்தி அந்தர்கத பிரஹ்மாவிற்கும், அவரது விபூதிகட்கும், உத்கர்ஷ உபபாதன பூர்வகம் பின்னமாகப் பிரதிபாதித்தலான்; அப்பிரஹ்மாவிற்கு "பிரஹ்மாவும், விஷ்ணுவும், ருத்திரனும், பரதந்த்துவ விபூதிகள்" என்னும் வசந அநுசாரத்தால், ஈஸ்வர பாவஞ் சித்தியாகலின். அற்றேல், பிரஹ்மாதி மும்மூர்த்திகட்கும் ஈஸ்வர பாவ மிருக்கினும், உதாஹரித்த ஸ்காந்த வசநங்களில் ஜீவர்கட்குப் போன்றுஈஸ்வரகோடிப்பிரவிஷ்ட பிரஹ்மாதிகளின் மத்தியில் சிவனுக்கே ஆதிக்கியம் பிரதிபாதித்தலான்; அதனுபாசனைக்கே ஆதிக்கிய மிருக்குக எனின், அற்றன்று; அவற்றுள், விசேஷண ரூப விக்ரஹ மாத்திர உபாசனைக்கு ஆதிக்யங் கூறப்படுகின்றதா? அல்லது விசேஷிய மாத்திரத்திற்கா? அல்லது, விக்ரஹ விசிஷ்டத்திற்கா? முதல தன்று; கேவல விக்ரஹம் மாயாகாரியமாகலின், சேதனத்தன்மையின்மையான், உபாசர்கட்கு இஷ்டபலத்தைக் கொடுக்குஞ் சாமர்த்தியமின்மையின், "பிரயோஜனத்தை உத்தேசியாது மந்தனும் பிரவிர்த்தியான்" என்னும் நியாயத்தான் உபாஸனு யோக்கியமின்றிய கேவல விக்ரஹ ஆதிக்ய கற்பனைக்குப் பிரயோஜக மின்மையின். இரண்டாவ தன்று; அவற்றுள்ளும், மாயாதீத சுத்தப் பிரஹ்ம ஸ்வரூபத்திற்கு ஆதிக்யம் கூறப்படுகின்றதா? அல்லது மாயா உபஹிதத்திற்கா? இருபக்ஷ உத்பத்திக்கும் அவகாசமின்மையின்.

"ஒன்றே அத்விதியம்" என்பதாதி சுருதியால் மாயா தீத சுத்தப் பிரஹ்ம ஸ்வரூபம் ஒரு ரூபமாகலானும், "இதனினின்றும் மாயி இவ்விசுவத்தைச் சிருஷ்டித் தார்" என்பதாதி சுருதியால் மாயா உபஹித பிரஹ்ம ஸ்வரூபமு மொன்ருகலானும், இருபதார்த்தங்களின்றி நியூன அதிகபாவ கற்பனை சுவரின்றிய சித்திரசமான மாகலின். மூன்ருவது மன்று; அதனுலும், விசேஷண தாரதம்மியத்தால் விசேஷ்யத்திற்கும் தாரதம்மியம் அங்கிகரிக்கப்படுகின்றதெனப் புகலப்படுகின்றதா? அல் லது, விசிஷ்டம் வேறு பாதார்த்தமெனக்கொண்டு பிர மாணபலத்தால் உமார்த்த விக்ரஹ விசிஷ்டத்திற்கு ஆதிக்யம் கூறப்படுகின்றதா? முதலதன்று; எங்ஙனம் ஒரே தேவதத்தனுக்கு அவ்வவ் வியாபார பேதத்தால் யாசகன் பாசகன் நர்த்தகன் பாடகன் பட்டன் முத லிய பெயர் மாத்திரபேதமானது பெயரையுடைய வனது பேத வியவகாரமின்றி அதன் நிமித்த தர தம பாவமுமின்ரே, அதுபோல் மாயா உபஹித ஒரே பர மேஸ்வரனுக்கே சத்துவாதி அவ்வக்குண வைசிஷ்டிய பேதத்தால் பிரஹ்ம விஷ்ணு சிவாதி பெயர் மாத்திர பேதமானது பெயரையுடையவனது பேதமின்றி அதன் நிமித்த தர தம பாவமும் கூறுதற்கு அசக்கியமாக லின். அது விஷ்ணு புராணத்தில்—"பகவான் ஜனார்த் தனன் ஒருவனே சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரத்தைச் செய்யும் பிரஹ்மா விஷ்ணு ருத்திரனென்னும் பெய ரை அடைகின்றனன்" எனக் கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙன மங்கிகரியாது, உபாதி பேதத்தால் உபதேய பேத மவசிய மங்கீகரிக்கின், சத்துவப் பிரதான மாயா உபாதியால் நிமித்தத்தன்மை அங்கியருக்கும்,

தமப்பிரதான மாயா உபாதியால் உபாதனத் தன்மை அங்கியருக்கும் என இரண்டு காரணம் அவசியம் அங்கீகாரஞ் செய்யவேண்டுதலின்; முற்புகன்ற அபின்ன நிமித்த உபாதானத் தன்மைச் சித்தாந்த ஹானிப் பிரசங்கம் வருமாகலின். மற்றும், பரமேஸ்வரனுக்குச் சஞ்ஜி பேதத்தைக்கொண்டு தர தம பாவமங்கீகரிக்கின் உத்தம மத்திம அதம ஈஸ்வரப் பிரசங்கத்தால் ஈஸ்வர நாநாத்தன்மைப் பிராப்தியான், "எதனினின்றும் இப்பூதங்களுண்டாகின்றன. உத்பன்னமானவை எதனாற் ஜீவிக்கின்றன" என்பதாதி பரமேஸ்வர ஏகத்தன்மைப் போதக சுருதி விரோதம் பிராப்தமாகலின். முற்புகன்ற அபின்ன நிமித்த உபாதானத் தன்மையும், சிருஷ்டி ஸ்திதி சம்ஹார கர்த்ருத்துவத் தன்மையும், விசேஷிய அபேத அபிப்பிராயத்தாற் சரிதார்த்தமாகலின், "எதனினின்றும் இப்பூதங்கள்" என்பதாதி பரமேஸ்வர ஏகத்தன்மைப் போதக சுருதி விரோத மின்றெனக் கூறற்க; நிர் விசேஷப் பிரஹ்மரூப விசேஷ்ய மாத்திரத்திற்கு மாயா சம்பந்த மின்றி ஜகத் சிருஷ்டியாதி சாமர்த்திய மின்மையின், விசேஷ்ய ஐக்கியப் பிரதிபாதனம் வியர்த்த மாகலின்.

அற்றேல், இங்ஙனம் உபாதி பேதத்தால் உபமேய பேதம் அங்கீகரியாவிடின், ஜீவேஸ்வரர்கட்கும் உபாதி பேதமின்மையானும், அதன் நிமித்த தாரதம்மிய மின்மையானும், சர்வக்ஞத்துவ கிஞ்சிக்ஞத்துவ வியவஸ்தை யின்மையால் ஜீவனுக்கும் ஜகத்கர்த்திருத்தன்மை, ஈஸ்வரனுக்கும் சம்சாரித்தன்மை என்பனவாதி அதிப் பிரசங்கம் வருமெனின், அற்றன்று; எங்ஙனம் பிம்பப் பிரதிபிம்பங்கட்கு அபேத மிருப்பினும் தர்பணத்தி

னுள்ள பீதத்துவ ஸ்யாமத்துவ சலநத்துவாதி மலின தர்மத்தாற் கவரப்பட்ட தன்மை பிரதி பிம்பத்திற்கே, பிம்பத்திற்கு அதிலுள்ள மலினத்தன்மை லேசமுமின்று; அதுபோல் ரஜோகுண தமோ குணங்களால் அமிழ்த்தப்பட்ட மலினசத்துவத்தையுடைய ஜீவர்கட்கு அவ்வவ் அந்தக்கரண வுபாதி பேதமியற்றிய தாரதம்மிய மிருப்பினும், ரஜோகுண தமோகுணங்களால் அமிழ்த்தப்படாத சுத்த சத்துவப் பிரதான மாயா உபாதியையுடைய பிரஹ்மாதி மும்மூர்த்திகட்கு ஈஸ்வரத்தன்மை, சர்வக்ஞத்தன்மை, நியாமகத்தன்மை, வசிகிருத மாயாத்தன்மை, அநாவிருத சைதந்நியத்தன்மையாதிகட்குச் சமானமாகலின், ஒரு தேவதத்தனே கம்பளம் வஸ்திரந் தரித்துக் கொள்ளுதல் போன்று, ஒரு பரமேஸ்வரனுக்கே சத்துவாதி குணமூர்த்தி பரிக்கிரகம் பொருந்துதலின், மூர்த்தி பேதமாத்திரத்தால் தர தம பாவம் பொருந்தாமையானும்; "எந்த மனிதன் பிரஹ்ம விஷ்ணு ருத்திரர்கட்கு உத்தம பாவத்தாற் பேதத்தைச் சாதிக்கின்றானோ, அவன் உதரவியாதியோடு கூடியவனாக உண்டாகின்றான்" என்னும் ஸாதாதப ஸ்மிருதி வசநங்களால் பிரஹ்மாதிகட்குத் தர தம பாவம் நிந்திக்கப்படுதலானும். அல்லது, விசேஷண தாரதம்மியத்தால் விசேஷ்பத்திற்கும் தாரதம்மியம் இருக்குக. அங்ஙன மாயினும், பொருத்த மின்மை யின்று; புகலப்படும் ரீதியால் விஷ்ணுத்தன்மை சிவத்தன்மை உபாதிரூப, விசேஷண உத்கருஷப் பிரதிபாதக வசநங்கட்குச் சமான மிருத்தலின் அவைகட்குத் தார தம்மியம் கூறுதல் அசக்கிய மாகலின். அற்றேல்,—"எவனுக்கு மாயையி லுள்ள சத்துவகுணம் சரீரமாகின்றது,

தமோகுணம் சம்ஹாரத்தின் பொருட்டு, அவன் மும்மூர்த்திகளுள் ருத்திர னுகின்றுன்; அந்நியனன்று. அங்ஙனமே எவனுக்குத் தமோகுணம் சாக்ஷாத் சரீரம், சத்துவகுணம் பாலனத்தின்பொருட்டு, அவன் மும்மூர்த்திகளுள் . விஷ்ணுவாகின்றுன்; அந்நிய னன்று. எவனுக்கு ரஜோகுணம் சரீரமாகிறது, அதுவே சிருஷ்டியின் பொருட்டும், அவன் மும்மூர்த்திகளுள் பிரஹ்மாவாகின்றுன்; விப்பிரர்களே! அந்நிய னன்று. விப்பிரேந்திரர்காள்! ருத்திரனுக்கு உள்ளில் சத்துவ குணமும் வெளியில் தமோகுணமு மிருக்கின்றன. விஷ்ணுவிற்கு உள்ளில் தமோகுணமும் வெளியில் சத்துவ குணமு மிருக்கின்றன. விப்பிரேந்திரர்களே! அப் பிரஜாபதிக்கு உள்ளிலும் வெளியிலும் ரஜோகுணம் இருக்கின்றது. அதனுல் சத்து குணத்தை அபேக்ஷித்து மனிதர்கள் கூறுகின்றுர்கள்; அரி சிரேஷ்டன், அரன் சிரேஷ்டன் என. ஆச்சரியம்! மோஹ வைபவம்! சத்துவமின்மையால் பிரஜாநாதனைச் சிரேஷ்டமெனக் கொள்வதே யின்று" என்பதாதி ஸ்காந்த வசந பரியாலோசனையால் எவ்வெவ்விடத்துச் சாத்துவிகத்தால் விஷ்ணுவின் உத்கர்ஷப் பிரதிபாதந வசநங்க ளிருக்கின்றன, அவைகளைப் புகன்றரீதியால் பாலனுதி குணபரத்துவ பரங்களெனக் கொள்க. எவ்வெவ் விடத்துத் தாமத குணத்தால் சிவனது நிகர்ஷ (தாழ்வு)ப் பிரதிபாதன வசநங்க ளிருக்கின்றன, அவைகளை நிகழ்த்திய ரீதியால் சம்ஹாராதி குணபரத்துவ பரங்களெனக் கொள்க. ஆகவே விஷ்ணுத்தன்மைச் சிவத்தன்மையாகிய உபாதியிரண்டின் தாரதம்மிய விசாரத்தில், தமோகுண உபாதியையுடைய விஷ்ணுவின் அபேக்ஷையால் சத்துவகுண

உபாதியையுடைய சிவனுக்கு உத்கர்ஷ மிருக்கின்றதெனின், இங்ஙனமன்று; "சத்துவம் ரஜசு தமசு என—சத்துவ சரீரம் மனிதர்கட்கு ஆகின்றன" என்பதாதி பாகவத வசநங்களிலும் சத்துவம் ரஜஸ் தமஸ் என்பதாதியால் பிரகிருதிஸ்வரூப சத்துவாதி முக்குணங்களை ஆரம்பித்து "அவற்றோடுகூடி—பெயரை" என்பதாதியால் ஒரு மாயா உபஹிதமே சத்துவாதி முக்குணங்களோடுகூடி ஸ்திதி உத்பத்தி சம்ஹார வியாபாரத்தின் பொருட்டுக் கிரமமாக விஷ்ணு பிரஹ்மா சிவனென்னும் பெயரை அடைகின்றதெனப் பிரதிபாதித்து "சத்துவ சரீரம் மனிதர்கட்கு ஆகின்றன" என்பதாதியால் சத்துவமய விக்ரஹ விசிஷ்ட விஷ்ணுவிற்குச் சர்வாதிசபம் ஞாபித்தலான், சத்துவ ரஜஸ் தமோ குணத் திரபக்கிரமத்தால் கிடைக்கப்பட்ட அநேக பாட அநுரோதத்தால் ரஜோ தமோமய விக்ரஹ விசிஷ்ட ப்ரஹ்மா, சிவன்கட்கு நிக்ருஷ்ட உபாதி யிருத்தலின்; நிகர்ஷம் அவசியம் அங்கிகாரஞ் செய்ய வேண்டுதலின், சத்துவ உபாதியையுடைய விஷ்ணுவின் உத்கர்ஷ அங்கிகாரமும் சமானமாகலின். பாகவதாதி புராணங்கள் விஷ்ணு பரத்வ இதம்பர்யத்தாற் பிரவர்த்தமாகலின், அப் பிரகரணத்தில் நிந்தைகூடாதென்னும் நியாயத்தால் தாமச விக்ரஹ விசிஷ்ட சிவ நிகர்ஷண உபபாதனம் விஷ்ணுப் பிரசம்ஸா பரமாகலின் எனக்கூறற்க; ஸ்காந்தாதி புராணங்கட்கும் சிவ பரத்துவ இதம்பர்யத்தாற் பிரவர்த்தமாகலின், அப் பிரகரணத்திலும நிந்தைகூடாதென்னும் நியாயத்தால் தாமத விக்ரஹ விசிஷ்ட விஷ்ணு நிகர்ஷ உபபாதனம் சிவப்பிரசம்ஸா பரத்தன்மை சமானமாகலின்.

அற்றேல், பாகவதாதிகளில் தாமத விக்ரஹ விசிஷ்டத்தால் பிரதி பாதிக்கப்படும் சிவ நிகர்ஷத்திற்கு "அவர்கட்கு கால மேக சம காந்தியும் கந்தை சூலம் கபாலமும் தரித்து விஸ்மயமான தாமரை போன்ற முகமுடைய சம்பு ஆவிர்ப்பவித்தார்" என்பதாதி பிரஹ்மாண்டபுராண வசநத்தை அநுஸரித்துச் சிவனுக்கு வேறு அவஸ்தையிற் கிரகிக்கப்பட்ட நீலவிக்ரஹ விசிஷ்டத் தன்மையாற் சரிதார்த்த மாகலின்; "சுத்த ஸ்படிகசமானனும், மூன்றாம்பிறைச்சந்திரனைத் தரித்தவனும், மூன்று நேத்திரம், நான்கு கைகள், நீலகண்டத்தையும் உடையவனுமுள்ள பரத்திற்கெல்லாம் பரமானவனைப் பிரஹ்ம வித்துகளில் சிரேஷ்டன், நித்தியம் சதா அதுவே நான் எனத் தியானிக்க" என்பதாதி ஸ்காந்த வசநபர்யாலோசனையால் ஸ்வாபாவிக சுவேத விக்ரஹ நிமித்த அதிசயம் சித்தித்தலின் எனின்; அற்றன்று; ஸ்காந்தாதி புராணங்களினும் தாமத விக்ரஹ விசிஷ்டத்தாற் பிரதி பாதிக்கப்படும் விஷ்ணு நிகர்ஷத்திற்கு "துளசிமாலையைத் தரித்தவனும், விநதா புத்திரனாய கருடாரூடனும், இந்தீவரம் (நீலோத்பலம்) போன்ற ஶ்யாம ரூபனும் உள்ள ஜோதிமயமான விஷ்ணு, என் முன் ஆவிர்ப்பவித்தார்' என்பதாதி புராணவசநத்தை அநுஸரித்து விஷ்ணுவிற்கு வேறு அவஸ்தையிற் கிரகித்த நீலவிக்கிரஹ விசிஷ்டத்தன்மையாற் சரிதார்த்தமாகலின். "பசுவின் பால்போன்ற காந்தியும், புண்டரீகம் போன்ற விசாலமான நேத்திரமும், இந்திர சந்திர சிரேஷ்டனும், ஸ்ரீதேவி பூதேவிகளால் பூஜிக்கப்பட்டவனும், பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவனுமுள்ள தேவனை யோகபீடத்

திற் றியாகிக்க. புருஷர்களாற் பூஜிக்க" என்பதாதி அநேக பிரமாணங்களால் புருஷசூக்த தேயபுருஷ வாசுதேவ நிருசிம்மத் தியானுதிகளில் சுவாபாவிக சுவேத விக்ரஹப் பரிக்கிரக நிமித்த அதிசயம் சமான மாகலின். மாறுப், ஸ்காந்த பாகவத வசந தாத்பர்ய பரிபாலோசனையால் உள்ளில் சத்துவமும், வெளியில் தமசுமாய உபாதி விசிஷ்ட சிவ அபேகைஷயால், உள்ளிலும், வெளியிலும் சத்துவ உபாதி விசிஷ்ட விஷ்ணுவின் உத்கர்ஷமே பிரதிதிபாகலின்.

எக்கால் "அஷ்டமூர்த்தி அநேகரூபம் சாத்துவிக சுத்த விக்ரஹம்" என அகஸ்தியருரைத்த சிவ ரஹஸ்ய வசநபலத்தால் சிவனுக்கும் பாஹ்யாந்தர சத்துவகுண உபாதி விசிஷ்டத்தன்மை யிருக்கின்றதெனப் புகலப்படுகின்றதோ, அக்கால் முற்புகன்ற ரீதியால் விஷ்ணு சிவவிசேஷண தார தம்மியப் பிரதிபாதக வசநங்கள் சமானமாகலின், அரி அரர்கட்குச் சமானத் தன்மை பிராப்தமாகலின், நமதிஷ்டசித்தியேயாகும்.

உபதேயம் போன்று உபாதிகட்கும் ஒரு ரூபத் தன்மையில், விஷ்ணு ருத்திராதி பேத வியவகாரம் பொருத்தமன்றெனக் கூறற்க; லக்ஷ்மீபதித்தன்மை, பார்வதி பதித்தன்மையாதி விசிஷ்ட விக்ரஹத்தால், அல்லது, ஸ்திதியாதி ரூப வியாபாரத்தால் விஷ்ணு ருத்திராதி பெபரின் பேதப்பிரயோஜக வியவகாரம் வியவஸ்தாபிக்கப்பட்டிருத்தலின்.

அற்றேல், இங்ஙனமாயின், பாஹ்ய ஆந்தர சத்துவ உபாதி வசத்தால், சமானத்தன்மையாற் பிரதிபாதிக்கப்படும் விஷ்ணு சிவ அபேகைஷயால் "எவனு

க்கு ரஜோகுணம் சரீரமாகின்றது, அதுவே உத்பாதனத்தின் பொருட்டும். அது மும்மூர்த்திகளுள் பிரஹ்மாவாகின்றது; விப்பிரர்காள்! அந்நியமன்று" என்பதாதி முன் உதாஹரித்த வசந ரீதியால், பிரஹ்மாவிற்குச் சத்துவ சம்பந்தமின்றிப் பாஹ்ய ஆந்தர ரஜோகுண விசிஷ்டத்தன்மையால், அதற்கு நிகர்ஷப் பிராப்தி எனின், அற்றன்று; துரீயசிவனுக்கும் குணசாமியாவஸ்தைப் பிரகிருதி உபாதி விசிஷ்டந்தாற் அரி அரர்கள்போன்று, கேவல சத்துவ உபாதி விசிஷ்ட அபாவத்தால் ரஜோதமோகுண சபலித சத்துவ உபாதி நிமித்த நிகர்ஷம், ஒருவராலும் நிவர்த்தி செய்தற் கியலாமையின். பாஹ்ய ஆந்தர ரஜோகுண உபாதி விசிஷ்டமாகலின் பிரஹ்மாவிற்குச் சத்துவ குண உபாதி சம்பந்தம் லேச மின்மையின், பிரஹ்மாபேக்ஷையால் முக்குண விசிஷ்ட உபாதியை யுடைய துரீய சிவனுக்குச் சத்துவ சம்பந்த நிமித்த அதிசயம் கூறுதலுசிதமெனக் கூறற்க; முக்குண விசிஷ்ட துரீய சிவனுக்குத் தமோகுண நிமித்த நிகர்ஷமே அவசிய மாகலின். துரீய சிவ அபேக்ஷையால் பிரஹ்மாவிற்குத் தமோகுண நிமித்த மாலின்ய மின்மையால், அவருக்கும் உத்க்ருஷத்தன்மையாற் கூறுவேண்டுதலின். இஷ்டப்பிராப்தியெனக் கூறற்க; துரீய சிவவாதிகளால் வியஷ்டி குண உபாதியையுடைய மும்மூர்த்தி அபேக்ஷையால் முக்குண சம்ஷ்டி விசிஷ்ட துரீய சிவ உத்கர்ஷமே அங்கீகரிக்கப்படுதலின். ஆகலின், விசேஷண தாரதம்யம் அங்கீகார அநங்கிகார பக்ஷங்கட்கும் வசீகிருதமாயாத்தன்மை, அநாவிருத சைதந்நியத்தன்மை முதலியன ஈஸ்வரகோடிப் பிரவிஷ்ட பிரஹ்மாதி மும்மூர்த்திகட்கு மாயா உபஹித விசேஷ்யசொரூப நிஷ்டமாகலின், அவ்

விடத்துத் தாரதம்யம் புகலுதல் பொருத்தமின்று. ஆகவே, டிகன்ற ரீதியால் அப் பிரஹ்மாதிகட்குத் தாரதம பாவம் பாதிக்கப்படுதலின், உதாஹரித்த ஸ்காந்த வசனங்கட்குப் பிரஹ்மாதி மும்மூர்த்திகளின் தாரதம்யப் பிரதிபாதனத்திற் றாற்பர்யமின்று. பின்னேயோ, "அநந்தாம் இதனல் பாத்தினின்றும் பாதரமான பதத்தைக் கூறுகின்றேன். அதனினின்றும் அதிகம் ஞாநம், ஆநந்தம், அத்வயம், பாம், தத்துவம்" என்பதாதி உபக்கிரம உபஸம்ஹார பர்யாலோசனையால் நிஷ்க்ருஷ்டரூபத்தால் நிர்விசேஷப் பிரஹ்மப் பிரதிபாதனத்தின் கண்ணே தாத்பர்யமென அறிக.

விசிஷ்டம் வேறு பதார்த்தமெனக்கொண்டு பிரமாண பலத்தால் உமார்த்தவிக்ரஹ விசிஷ்டத்திற்கே ஆதிக்யம் கூறப்படுகின்றதென யாது கூறப்பட்டது, அதுவும் பொருத்தமின்று; விஷ்ணு சிவப் பிரதிபாதக சகல சுருதி ஸ்மிருதி புராணுதிகளில், முமுக்ஷு உபாஸ்யத்தன்மை, ஞானத்தைக் கொடுக்குந் தன்மை முதலியவற்றிற்கு உபய சாதாரணத்தன்மை பிரதிபாதித்தலான், அவற்றிற்குத் தாரதம்ப கற்பனம் யுக்தமன்றென விது கூறப்படுமாகலின். அற்றேல், இங்ஙனமாயினும் "எது பூர்வம் பிரஹ்மாவை உண்டாக்கினது—அடைந்து"; "உமாசகாயனே—பின்னல்" என்பனவாதி சுருதிகளால் பரமசிவனுக்கு முமுக்ஷு உபாஸ்யத்தன்மை பிரதிபாதித்தலான்; அவனுக்கு மோக்ஷத்தைக் கொடுக்குந் தன்மையால் உத்கர்ஷ முண்டாகின்றதெனின், சத்தியம்; "திருப்பாற் கடலிற் பள்ளிகொண்டிருப்பவனும், நாசிம்ம விக்ரகத்தை யுடையவனும், யோகி தியாநித்தற்கு யோக்கியனுமுள்ள பரம்பதனை

அறிக; எவன் அறிகின்றான், அவன் அமிருதத்தன்மையை அடைகின்றான்''; "எதனால் நமஸ்கரிக்கின்றேன் எனக் கூறப்படுகின்றது. எதனால் எதைச் சர்வதேவர்களும், முமுக்ஷுக்களும், பிரஹ்மவாதிகளும் நமஸ்கரிக்கின்றார்கள்''; "ஆத்மாவே நரஸிம்ம தேவப் பிரஹ்மமாகின்றது. எவன் இங்ஙனம் அறிகின்றான் அவன் அகாமன், நிஷ்காமன், ஆப்தகாமன், ஆத்மகாமன் அவனது பிராணன்கள் உயரக்கிளம்புவனவல; இவ்விடத்திலேயே லயமடைகின்றன. பிரஹ்மமாகவே யிருந்து பிரஹ்மத்தை அடைகின்றான்'' என்பனவாதி நரசிம்மதாபநீய சுருதியாலும், "எவர்கள் சதா ராமன் நான் எனத் தத்துவத்தானே கூறுகின்றார்களோ, அவர்கள் சம்சாரிகளல்ல. நிச்சயமாக ராமனே; சம்சயமின்று. சச்சிதாநந்த ஸ்வரூபமுடைய ராமனை நன்கு அறிக. சதா இருதயத்தில் சர்வதேவர்களும் முமுக்ஷுக்களும் நமஸ்கரிக்கின்றார்களோ, அந்தப் பூர்ணாநந்த ஏக விக்ரஹமாகிய நமஸ்கார பதத்தை நன்கு அறிக'' என்பதாதி ராமதாபநீய சுருதியாலும், "புண்டரீகம் போலும் நயநத்தையும், மேகம்போன்ற காந்தியும், வைத்யுதம் (மின்னல்) போன்ற வஸ்திரத்தையும், இருபுஜங்களையும், வேணுமுத்திரையையும், வனமாலையையும், கோப கோபிகளின்சம்பந்தத்தையும், கற்பக விருக்ஷ லதையையும், திவ்விய ஆபரண அலங்காரத்தையு முடையவனையும், செந்தாமரைப்புஷ்பத்தின் மத்தியி லிருப்பவனையும், காளிந்தி நதி ஜலத்தின் கல்லோல சப்த சம்பந்தி வாயுக்களாற் சேவிக்சப்பட்டவனையுமுள்ள ஈஸ்வரனாகிய கிருஷ்ணனை மனதால் சிந்தித்து சம்ஸாரத்தி னின்றும் முக்த னாகின்றான். எக் கிருஷ்ணன் ஒருவனாக விருந்தும் நாநாவாக விளங்குகின்று

னே, அப்பிடத்திலிருப்பவனை எந்தத் தீரர்கள் பஜிக்கின்றார்களோ, அவர்கட்குச் சாசுவதமான சுகம் உண்டாகின்றது; மற்றையோர்கட் கன்று. நித்தியங்களுள் நித்தியனும், சேதனங்களுட் சேதநனும், அநேகங்களுள் ஏகனும் இருந்து, எவன் காமங்களைக் கொடுக்கின்றானோ, அந்தப்பிடத்திலிருக்கும் பகவானை யெந்தத் தீரர்கள் பஜிக்கின்றார்களோ அவர்கட்குச் சாஸ்வதமான சித்தியுண்டாகின்றது; மற்றையோர்கட்கன்று. எந்தக் கிருஷ்ண பகவான் பூர்வம் பிரஹ்மாவை யுண்டாக்கினரோ, அவர் அவன் பொருட்டு வித்தையை உபதேசிக்கின்றார்; ரக்ஷிக்கின்றார். ஆத்ம புத்திப் பிரகாச அவ்வித் தேவனது சரணத்தை முமுக்ஷு அடைகின்றான். கோபாலன் நான் எனப் பாவிக்க அவன் மோக்ஷத்தை அடைகின்றான்; அவன் பிரஹ்மத்தை அடைகின்றான்; அவன் பிரஹ்மவித்தாகின்றான்" என்பதாதி கோபால தாபநீய சுருதியாலும், "சுத்தமாய தேவன் நாராயணன் ஒருவனே; இரண்டாவதுஒன்றும் இன்று. எவன் இங்ஙனம் அறிகின்றான் அவன் விஷ்ணுவே ஆகின்றான்; அவன் விஷ்ணுவே ஆகின்றான்" என்பதாதி நாராயண உபநிஷத் வசநத்தாலும், "வியர்த்தமான ஆசையையும், வியர்த்தமான கர்மத்தையும், குதர்க்க ஞானத்தையும், விக்ஷிப்த சித்தத்தையும் உடைய மூர்க்கர்கள் ராக்ஷசத்தன்மையையும், அசுரத்தன்மையையும் மோஹத்தையும், கொடுக்கும் பிரகிருதியை ஆசிரயித்து, சர்வபூத மஹேஸ்வரனுகிய எனது பரமபாவத்தை அறியாது என்னை மனுஷ்ய சரீரத்தை ஆசிரயித்திருப்பவனாக அறிகின்றார்கள். ஹே பார்த்த! தேவத்தன்மையையுடைய பிரகிருதியை ஆசிரயித்த மஹாத்மாக்கள், பூதாதியாயும், அவ்வியயமாயுமுள்ள என்னை அநந்நியமனதா லறிந்து பஜிக்கின்றார்கள். திட

விரதத்தையுடைய பிரயத்நவான்கள், என்னைச் சதா கீர்த்திக்கின்றார்கள். என்னைப் பக்தியால் நமஸ்கரிக்கின்றார்கள். நித்தியம் பொருந்தி உபாசிக்கின்றார்கள்" என்பதாதி பகவத்கீதா வசநங்களாலும், விஷ்ணுவிற்கும் முமுக்ஷு உபாஸ்யத்தன்மை பிரதிபாதித்தலின், மோக்ஷத்தைக் கொடுக்குந்தன்மை சித்தித்தலின். "சம்சாரத்தினின்றும் மோசகன் சாக்ஷாத் சிவனே; அந்நிய னன்று; அந்நிய சகல தேவர்களும் பரம்பரையாய் மோசகர்கள்" என்பதாதி ஸ்காந்த வசந அநுரோதத்தால், பரமசிவனுக்குச் சாக்ஷாத் மோக்ஷசாதநத் தன்மை, விஷ்ணுவாதி உபாசனைக்குப் பரம்பரையாய் மோக்ஷ சாதநத்தன்மை எனக் கூறற்க; "தேவத் தன்மையுடைய இக் குணரூப மாயையைக் கடத்த லரிது; என்னையே யெவர்கள் அடைகின்றார்களோ, அவர்கள் இந்த மாயையைக் கடக்கின்றார்கள். மாயையால் கெட்ட ஞானத்தையுடைய அசுரத்தன்மையை ஆசிரயித்த கெட்ட கர்மங்களைச் செய்யும் நர அதமர்களாய மூடர்கள் என்னை அடைவ தில்லை"; "அவ்வவ் வாசையால் அமிழ்த்தப்பட்ட ஞானத்தை யுடையவர்கள் அந்நிய தேவர்களை அடைகின்றார்கள்"; "என் பக்தன் என்னையே அடைகின்றான்"; "ஓம் என ஒரு அக்ஷரம் பிரஹ்மம்"; "மீண்டு ஜன்ம"மின்றுஎன்பனவாதி பகவத்கீதா வசந அநுஸாரத்தால் விஷ்ணு உபாசனைக்கே சாக்ஷாத் மோக்ஷசாதகத்தன்மை, சிவாதி உபாசனைக்குப் பரம்பரையாக அர்த்த சாதநத்தன்மை என்னும் அர்த்தம் சமானமாகலானும்; "பிரஹ்மவித்துப் பரத்தை அடைகின்றான்"; "பிரஹ்மவித்துப் பிரஹ்மமே யாகின்றான்"; "மோக்ஷத்தின்பொருட்டு வேறு மார்க்க மின்று" என்பனவாதி பிரபல சுருதிகளால் ஞானத்திற்கே சாக்ஷாத்

மோக்ஷ சாதநத்தன்மை அறியப்படுதலின், உபாசனை மாத்திரத்திற்குப் பரம்பரையாய் மோக்ஷ சாதநத்தன்மை என்னும் அர்த்தமே கூறவேண்டுதலானும்.

அற்றேல், இங்ஙன மாயினும், "எவ்வெம் மூர்த்தியை ஆசிரயித்து ஜநங்கள் பிரஹ்ம பாவனையால் ஆராதிக்கின்றார்கள் அவ்வெல்லோரும் சங்கரனைக் கிரமமாக அறிகின்றார்கள். நிஷ்காமர்கள் ருத்திர மூர்த்தியை ஆராதித்துப் பிரசாதத்தால் சர்வவிடத்திலு மிருக்கும் சிவனை யத்ந மின்றியே அறிகின்றார்கள்" என்பதாதி ஸ்காந்த வசந அநுரோதத்தால் சிவ உபாசனைக்கே சாக்ஷாத் ஞாநசாதகத்தன்மை, விஷ்ணு உபாசனைக்குச் சிவ உபாசனை வாயிலாய் ஞான சாநத்தன்மை எனின், அற்றன்று; "எப்புண்ணிய கர்மத்தையுடைய ஜீவர்கள் பாப மின்றித் திடவிரத முடையவர்களாய் என்னைப் பஜனை செய்கின்றார்கள்; அவர்கள் துவந்துவமும், மோஹமு மின்றியவர்க ளாகின்றார்கள். எவர்கள் ஜராமரண மோக்ஷத்தின்பொருட்டு என்னை ஆசிரயித்து யத்நஞ் செய்கின்றார்கள், அவர்கள் பிரஹ்மமே. அவர்கள் சகல அத்தியாத்மத்தையும் சகல கர்மத்தையும் அறிந்தவர்க ளாகின்றார்கள். எவர்கள் அந்நிய தேவதையின் பக்தர்கள், அவர்கள் உண்மையாக இதனினின்று நழுவுகின்றார்கள்" என்பதாதி பகவத் வசநத்தாலும், "சுருதி யுக்திப் பிரமாணங்களால், சந்திர பேதம் தசதிக்குப் பிராந்திகள் போன்று நிராகரித்திருத்தலின், எது பரியந்தம் சர்வஜகத்தும் எனது சொரூபமாகப் பார்க்கப்படவில்லை, அது பரியந்தம் எனதாராதனபர னாகுக; எவன் சிரத்தாவானாயும் அதி ஊர்ஜித பக்தியை யுடையவனாயு மிருக்கின்றானோ, அவனிருதயத்தில் நான் அகோராத்திரம் விளங்குகின்றேன்.

சுருதி சாரசங்கிரகமாய இந்த ரஹ்ஸ்யம் என்னால் நிச்சயிக்கப்பட்டு உனக்குப் பிரியத்தாற் கூறப்பட்டது" என்பதாதி ராம வசநத்தாலும், "பாஸ்கரனது பக்தனுய நரனுக்கு அவனது பிரசாதத்தானேயே எழு ஜன்மத்தில் ருத்திர பக்தி உண்டாகின்றது. சங்கரனது பக்தனுய நரனுக்கு எழு ஜென்மங்களில் அவனது பிரசாதத்தானேயே விஷ்ணு பக்தி உண்டாகின்றது. எந்த வாசுதேவனது பக்தனுய நரனுக்கு அவனது பிரசாதத்தானேயே எழு ஜன்மங்களில் வாசுதேவனிடத்தில் லயத்தை அடைகின்றான்" என்பதாதி வாமந புராண அநுஸாரத்தாலும், விஷ்ணு உபாசனைக்குச் சாக்ஷாத் ஞானத்தன்மை, சிவாதி உபாசனைக்கோ, விஷ்ணு உபாசனையின் வாயிலாய் ஞான சாதநத்தன்மை என்னும் இவ்வர்த்தம் சமானமாகலின்.

"நீ தேவர்களிற் பிராமணனாகின்றாய்; நான் மனிதர்களுள் பிராமணனாகின்றேன்; பிராஹ்மணன் பிராஹ்மணனை நடத்துகின்றான்; உன்னை நடப்பிக்கின்றேன்" என்பதாதி சுருதியால் சிவனுக்கே பிராஹ்மண உபாஸ்யத்தன்மை பிரதிபாதிக்கப் படுகின்றதெனக் கூறற்க; முன் னுதாஹரித்த நரசிம்ஹ கோபால தாபநீயாதி சுருதிகளாலும், "மீண்டு பிராஹ்மணர் புண்ணியர்களா?" என்பதாதி பகவத்கிதா வசநங்களாலும், விஷ்ணுவிற்கும் பிராஹ்மண உபாஸ்யத் தன்மையென்னு மர்த்தம் சமான மாகலின். ஆகலின், சிவனுக்குத் துரியமூர்த்தி அங்கிகரிக்கினும், தனதிச்சா கற்பித சகல பரமேஸ்வர விக்ரஹங்களில், அநாவிருத சைதந்நியத்தன்மை, முமுக்ஷு உபாஸ்யத்தன்மை, ஞானத்தைக் கொடுக்குந் தன்மையாதி விசிஷ்டப் பரமேஸ்வரன் ஒரு ரூபமாக விருத்தலின், அதன்கண் தர தம பாவ முரைத்தல் பொருத்த மின்று.

மற்றும், எங்ஙனம் பிரமாண பலத்தால் சிவனுக்குத் துரிய மூர்த்தி அங்கிகரிக்கப்படுகின்றது, அது போன்றே விஷ்ணுவிற்கும் துரிய மூர்த்தி அங்கிகரித்தற்கு ஆற்ற லிருக்கின்றது. விஷ்ணுவிற்குத் துரிய மூர்த்தி யிருப்பதிற் பிரமாண மின்றெனக் கூறற்க. "நாராயண னொருவனே யிருந்தான். அவனி னின்றும் இந்த விசுவம் ஹிரண்யகர்ப்பன் அக்நி யமன் வருணன் விஷ்ணு ருத்திரன் இந்திரர்கள் உண்டாகின்றனர்" என்பதாதி பைங்கி ரஹஸ்யப் பிராஹ்மணத்தாலும், "காரண புருஷனுய நாராயணனே" என்பதாதி நாராயண உபநிஷத் வசநத்தாலும், "ஜாக்ரத்திற் பிரஹ்மா, ஸ்வபநத்தில் விஷ்ணு, சுழுப்தியில் ருத்திரன், துரீயத்தில் அக்ஷரம், அது ஆதித்தியனும் விஷ்ணுவும் சிவனும்" என்பதாதி பிரஹ்ம உபநிஷத் வசநத்தாலும், "எது நரசிம்ஹ தேவபகவானுயும் பிரஹ்மாவாயும் விஷ்ணுவாயும் மஹேஸ்வரனுயும் (இருக்கின்றது) அதன் பொருட்டு நமஸ்காரம் நமஸ்காரம்" என்பதாதி நிருசிம்ம தாபநீய உபநிஷத் சுருதியாலும், "எது ஸ்ரீராமச்சந்திரனும், அத்வைத பரமானந்த பகவானும், எது பிரஹ்மா விஷ்ணு ஈசுவரனுமா யிருக்கின்றது அதன் பொருட்டு நமஸ்காரம், நமஸ்காரம்" என்பதாதி ராம தாபநீய உபநிஷத் சுருதியாலும், "அரை மாத்திரை சொரூபம் கிருஷ்ணன். எதில் ஜகத்து நிலைத்திருக்கின்றது. கிருஷ்ணரூப ஜகத் கர்த்தாவிடத்தில், மூலப் பிரகிருதியாகிய ருக்மணி" என்பதாதி கோபால்தாபநீய சுருதியாலும், துரீய நாராயண நரசிம்ஹ ஸ்ரீராம கோபாலர்களும் பிரதிபாதிக்கப் படுதலின்.

புகன்ற பைங்கி ரஹஸ்ய ப்ராஹ்மணுதிகளில் நாராயணுதிகட்கு மாயா உபஹித ப்ரஹ்ம அபேத அபிப்

பிராயத்தால் அவ்விடத்தில் நாராயணுதி சப்தப் பிரயோகமாகலின், துரீய நாராயணப் பிரதிபாதன மன்றெனக் கூறற்க; அதர்வசிகாதிகளிலும் சிவனுக்துமாயா உபஹிதப் பிரஹ்ம அபேத அபிப்பிராயத்தால் சம்பு சிவாதிப் பிரயோகப் பொருத்தம் சமானமாகலின். எக்கால் அதர்வசிகாதிகளில் விரோதமின்மையின், ஜகத்காரணப் பிரஹமத்தின் உபாசனையின் பொருட்டே சம்பு சிவாதி சப்தத்தால் துரீய சிவமூர்த்தி பிரதிபாதிக்கப் படுகின்றது என அங்கிகரிப்படுகின்றது, அக்கால் பைங்கி ரஹஸ்யப் பிராஹ்மணுதிகளிலும் விரோத மின்மையின், ஜகத் காரணப் பிரஹ்மத்தினது உபாசனையின் பொருட்டே நாராயண நரசிம்ஹாதி சப்தங்களால் துரீய நாராயணுதி மூர்த்திகள் பிரதிபாதிக்கப் படுகின்றன ரெனப் பிரகிருதத்திலும் திருஷ்டியைக் கொடுங்கள். ஆகவே, உரைத்த சகல பிரமாணங்களின் அவிரோதத்தை இச்சிக்கும் அச்சமதியுடையவர்களால் மாத்சர்யத்தை விட்டு "சித்ஜடங்களில் எவன் திருஷ்டா அவன் அச்சுதன், ஞானவிக்ரஹன், அவனே மஹாதேவன், அவனே மஹா அரி, எவன் என்னைத் துவேஷிக்கின்றான் அவன் உன்னைத் துவேஷிக்கின்றான்; எவன் உன்னை அவன் பின்னல் என்னை. ஹே ஜகத் பதியே! நம் மிருவருக்கும் சப்தங்களாலும் அர்த்தங்களாலும் பேத மில்லை ஹே கோவிந்த! லோகத்தில் உனது எந்த நாமங்கள் கூறப்படுகின்றன அவையே எனது நாமங்கள்; இதில் விசார மில்லை; சிவரூபமாய விஷ்ணுவின் பொருட்டும், விஷ்ணு ரூபமாய சிவன் பொருட்டும் எங்ஙனம் பேதம் பார்க்க மாட்டேன், அங்ஙனமே எனக்கு ஆயுளில்" மங்களமுண்டாகுக; என்பதாதி சுருதி

பாரத ஸ்காந்தாதி அநேகப் பிரமாண அநுஸாரத்தால் சகல வைதிக சம்மத பகவத்பாத அங்கீகார கேவலாத்வைத மார்க்கத்தையே அநுஸரித்து அரி அரர்கட்கு அர்த்தத்தாலும், சப்தத்தாலும், அபேதத்தையே அங்கீகரித்து, விஷ்ணு உத்கர்ஷப் பிரதிபாதக, சிவ உத்கர்ஷப் பிரதிபாதக, சகல சுருதி ஸ்மிருதி இதிகாசபுராணங்கட்கும் அவிரோதம் ஸ்தாபிக்குக. ஆகலின், துரியமூர்த்தி அங்கிகார பக்ஷத்தில் பிரஹ்ம விஷ்ணு ருத்திராதி குணமூர்த்திகளில் அநுஸ்யூத பரமேஸ்வரனொருவனே யாகலின், உபாஸ்யதேவர்களில் தர தம பாவகற்பனை பொருத்தமின்று. இங்ஙனங் கொள்ளாது, ஒரு பரமேஸ்வரனுக்கே தர தம பாவ மங்கிகரிக்கின், நாநாத்தன்மை பிராப்தமாகலின்; "எதனி னின்றும்" என்பதாதி காரண ஏகத்துவ போதக சுருதி விரோதப் பிராப்தம் பூர்வமே புகலப்பட்டிருத்தலின். மற்றும், மந்திர சாஸ்திரத்தில் பிரஹ்ம ருத்திர விஷ்ணு கௌரி சரஸ்வதி லக்ஷ்மிபாதிகட்கு ஈஸ்வரபாவம் பிரதிபாதித்து,எங்ஙனம் பக்திப்பிரதானம் அங்ஙனமே உபாசனை விதிக்கப்படுதலின்; அச்சாஸ்திர விரோதப் பிராப்தியும் வரும். அது மந்திரசாஸ்திரத்தில் "ஒரே சர்வேஸ்வரன் பிராந்தியால் சதா பின்னம் போன்று பார்கப்படுகின்றான். எங்ஙனம்,ஆகாசம் கடாகாச மடாகாச பேதத்தால் போகமோக்ஷத்தைக் கொடுக்கும் ஜகன்மய தேவன் பரமாத்மா. அந்த ஆநந்த விக்ரஹத்தையே யோகீந்திரர்கள் நாநாவாக உபாஸிக்கின்றார்கள். மஹாதேவன், வாசுதேவன், சிவன், விஷ்ணு, அரன், அரி, ருத்திரன், விரிஞ்சி, பாகாரி என்னுமிவைகளால் கூறப்படும் புருஷன்; பிரகிருதி, மோஹநி, வித்தியா, தக்ஷகர்பா, அத்திரிஜா, ரமா, வாணி, ருத்தி

ராங்கிரா, காளி, கீ, தாரா, ஜகன்மாதா, காயத்திரி, பிரஹ்மவித்தியா என ஒரு தேவதை கூறப்படுகின்றது. ஒரு பரப்பிரஹ்மமே, புருஷ ஸ்திரீ ரூப விபாகத்தால் இருவித சொரூபம்; அவற்றுள் ஒன்றை உபாஸித்து சுகத்தை அடைக" எனக் கூறப்பட்டிருக்கின்றது.

அற்றேல், பிரஹ்ம விஷ்ணு ருத்திரர்கட்கு ஈஸ்வரகோடிப் பிரவிஷ்டத் தன்மையிற் பரஸ்பரம் உபாஸ்ய உபாஸக பாவப் பிரதிபாதக சுருதி ஸ்மிருதி இதிகாச புராணாதிகட்குக் கதி என்னை எனின்; கூறப்படுகின்றது. "என்னாற் பிரமாணஞ் செய்யப்பட்டதை லோகத்தி லுள்ளவர்கள் அநுவர்த்திக் கின்றார்கள். ஹே பாண்டவ நந்தன! எனக்கு ஒன்றும் கொடுக்கவேண்டுவதின்று எனப் பூர்வம் நான் மனதால் நன்கு சிந்தித்துச் சர்வேஸ்வரனைப் புத்திரன்பொருட்டு நான் ஆராதித்தேன்; தன்னைத் தன்னால்" என, மோக்ஷதர்மத்தில் பார்த்தனைக் குறித்துப் பகவத் வசனத்தால் சகல காமங்களும் அடைந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்குச் சிவ உபாசனை லோகாநுக்கிரகத்தின் பொருட்டென அறியப்படுகின்றது. இந்நியாயத்தால் சிவனுக்கும் சிலவிடத்து விஷ்ணு உபாசனை லோகாநுக்கிரகத்தின் பொருட்டே எனச் சித்திக்கின்றது. ஆகவே, சிவ விஷ்ணு வாதி பரஸ்பர உபாஸனப் பிரதிபாதக வசநங்கட்கு எல்லோரும் அவ்விதப் பிரதிபாதன வாயிலாய் அவ்வம் மூர்த்தி யுபாசனை அவசியம்செய்யத் தக்க பரத்தன்மையே யாம். இங்ஙனம் அங்கீகரியாது ஈஸ்வரகோடிப் பிரவிஷ்ட பிரஹ்மாதிகட்கு ஸ்வப் பிரயோஜனத்தின்பொருட்டே பரஸ்பர உபாசனை யென அங்கீகரிக்கின், பரமேஸ்வரனுக்கு நித்திய முக்தத்தன்மை பாப மின்மையாதி விரோதம் வருதலின்.

அற்றேல், இங்ஙனமிருக்கினும், சிவதத்துவ விவேக பிரஹ்மதர்க்கஸ்தவ முதலிய கிரந்தங்களில் விஷ்ணுவிற்குச் சிவ அபேக்ஷையால் நிகர்ஷப் பிரதிபாதனம் பார்க்கப்படுதலானும், ராமாதி அவதாரங்களில் கௌசல்யாதி கர்ப்பவாச சோகமோஹாதி ஜீவலிங்கம் பார்க்கப்படுதலானும், விஷ்ணுவிற்கு ஜீவபாவமே அங்கிகாரமெனப் பிரதிதியாகலின் அதன் விரோதம் வருமெனின், அற்றன்று; அக்கிரந்த மியற்றிய அப்பய்ய தீக்ஷித சரணர்களால் பிரதிவாதி நிராகரணத்தின் பொருட்டு விஷ்ணுவிற்குச் சிவ அபேக்ஷையால் நிகர்ஷம் பிரதிபாதிக்கப்படினும், உண்மையாக அதிற் றாற்பர்ய மின்மையின், அப்பிரதிபாதநத்திற்கு நிந்தை கூடாதென்னும் நியாயத்தால் சிவ உபாசனை அவசியம் செய்பத்தக்கதெனத் தாத்பர்யமாகலின். இதனானேயே, மத்வமத வித்துவம்சனத்தில், அவர்களானேயே “சாஸ்திரத்தினது விஷயமாய சிவனை அல்லது விஷ்ணுவைக் கூறினும் இஷ்டமான அதைக் கிரகிக்க; அந்தச் சகுணப்பிரஹ்மமும் பஜனை செய்யும் நமக்கு விரோதம் அத்தியந்தம் தோன்றவில்லை. சாஸ்திர மறிந்தவர்கட்கு நிந்தைகூடாது; சூத்திரங்கட்கு வேறு அர்த்தமுமின்று; பகவத் வாக்கியம் உசிதம்” எனவும், சிவ கர்ணாமிருதத்தின்கண்ணும்—“நாராயணனைப் பரம்பிரஹ்மமெனக் கூறுகின்றார்கள்; அதுவும் நாராயணனுக்குச் சிவ அபேதபக்ஷத்தில் அற்பமும் விரோத மின்று. பேதபக்ஷத்திலோ, நாராயணனுக்குப் பரப்பிரஹ்ம பாவனையாற் சித்தித்த அத்தன்மையின் வர்ணனையா லறிக” எனவும், சிவாநந்த லஹரியிலும், சித்தாந்த லேச சங்கிரகத்திலும் “பரமேஸ்வரனுக்கு' ரகுநாதாதி; அவதாரத்தில் தபஸ்வித்தன்மை,

தக்க சம்பந்தாதி கேட்கப்படுதலின், முக்தர்கட்கும் ஈஸ்வரபாவத்தில் மீண்டு பந்தம் வருவதின்று; அப் பரமேஸ்வரனுக்கு விப்பிரசாப அமோகத்துவாதி தான் இயற்றிய மரியாதையைப் பரிபாலனத்தின்பொருட்டு ஒருகால் பிருகு சாபாதி சத்தியத்தன்மையை அறிவித்தற்பொட்டு நரன் போன்று ஈஸ்வரனுக்கு அதன் அபிநய மாத்திர பரமாகலின். இங்ஙனங் கொள்ளா தொழியில், அவ் வீஸ்வரனுக்கு நித்திய முக்தத்தன்மை, நிந்தை யின்மை, ஸ்வந்தரத்தன்மை, சமான மின்மை, அதிக மின்மையாதி சுருதி விரோத மாகலின்" எனவும் கூறப்பட்டிருக்கின்றன. ஆகலின், வியாஸ அங்கீகார கேவலாத்வைதரூபசச்சிதாநந்த அகண்ட நிர்விசேஷப் பரப் பிரஹ்மமே மாயா உபஹித அமூர்த்த ரூபத்தாலும், ஜகத் ஜன்மாதி காரணத்தன்மை ரூபத்தாலும், பிரஹ்ம விஷ்ணுருத்திர ராம கிருஷ்ணாதி ரூபத்தாலும், முமுக்ஷு உபாஸியத்தன்மையும், அதன் பிரசாதத்தாலேயே பிரஹ்மஞானப் பிராப்தியும் என இவ்வெல்லாம் எல்லோரும் ரமிக்கு மாறு கூறப்பட்டன.

நிறந்தருந் தெய்வ வியாஸதாத் பரிய
 நிர்ணயஞ் செய்யுமிப் பூர்ணச்,
சிறந்திடு மதியின் பிரபையை யுண்டு
 சீர்மிகு மாநந்த மடைக,
அறந்தருஞ் சத்தா மணச்சத்தி யுடைய
 வருஞ்சகோ ரங்கடா நன்கு,
துறந்துள ரியாரு மிதனையே நன்கு
 துரிதமா வறிந்துமே கொள்க.

பொய்பதாம் பேத வாதிகன் மனதைப்
   பேதனம் புரிந்திடு போது,
மெய்பதாம் பிரம தத்துவ மறிந்த
   விவேகிக ளாலுமே யிந்தச்,
செய்யபா தராய ணமுனிசித் தாந்தஞ்
   செய்யவத் துவைதடின் டிமந்தான்,
உய்யவே சிறப்பா யுரைக்கவே வேண்டு
   முறுதியெல் லாந்தரு மாதோ.

ஸ்ரீமத் வேதாந்தசித்தாந்த ரஹ்யார்த்தப் பிரகாச துரந்தராய
ஸ்ரீமத் அய்யண்ண திக்ஷிதரா லியற்றப்பட்ட
வியாஸ தாத்பர்ய நிர்ணயம்
முற்றுப்பெற்றது.



# புஸ்தக விளம்பரம்.

## வேதாந்த டிண்டிமம்.

(வேதாந்தப் பேரிகை.)

இது சம்ஸகிருத்தி லிருந்து சோவிலூர் ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகளால் மந்தரும் உணருமாறு மூலஞ் செய்யுள் வடிவமாயும் அதை விளக்கத் தெளிவான உரையு மியற்றப்பட் டிருக்கின்றது. இது போன்ற வேதாந்த நூற்கள் தமிழில் மிகக் குறைவே. ஆகலின் இது வேதாந்த அப்பியாசிகள் ஒவ்வொருவரிடத்தும் அவசிய மிருக்க வேண்டும். அணா நான்கு.

---

## வேதாந்த சாஸ்திர ரத்நாவலி.

இதில் நாநாஜீவவாதக் கட்டளை, கோசாரத் தாலாட்டு, சசிவன்ன போதம், மஹாராஜா துறவு, வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், இலக்ஷணவிர்த்தி, வேதாந்த சூடாமணி, கைவல்ய நவநீதம் ஆக ஒன்பது புத்தகங்க ளடங்கி யிருக்கின்றன. இது 32 பேஜி பாக்கட்சைஸில் 50 பவுண்டு கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டு இரண்டு மகான்களினது படத்துடன் கூடி யிருக்கின்றது. இதன் விலை ரூபாய் 1 - 0 - 0.

---

## விவேக சூடாமணி.

சுத்தபாடம் - பாக்கெட்சைஸ் - விலை அணா 8.

இது ஸ்ரீசங்கர பூஜ்ய பகவத்பாதாசாரிய சுவாமிகளவர்களால் திருவாய்மலர்ந் தருளப்பட்டது. இந்நூல் தமிழ்மக்கட்குப் பெரிதும் பயன்படுமாறு திருவிடை மருதூர்ப் பிட்சு சாஸ்திரிக ளென்னும் உலகநாத சுவாமிகளவர்களால் 671 பாடலாக மொழி பெயர்த்தருளப் பட்டது. இதில் 164 அரியபெரிய விஷயங்க ளடங்கி யிருக்கின்றன. இது முமுட்சுக்களொவ்வொருவராலும் பொன்னே போல் போற்றப் படுவது; ஆத்மாநாத்ம விவேகமடைதற்குப் பரம சாதனமாயுள்ளது.

## ரிபுகீதைத்திரட்டு (குறிப்புரையுடன்.)

மகா இதிகாசங்களு ளொன்றாகிய சிவரகசியத்தின் ஆரு வது அம்சத்திலுள்ள ரிபுகீதை வடமொழிப் பயிற்சியுடையார்க் கன்றித் தமிழருக் குபயோக மாகாதிருத்தலை நோக்கித் திருவிடை மருதூர்ப் பிட்சு சாஸ்திரிகளென்று வழங்கும் உலகநாத சுவாமிக ளவர்களால் 1924 பாடலாகத் தமிழில் மொழி பெயர்த் தருளப்பட்டது இது தமிழ்மக்க ளியாவருக்கும் பெரிதும் உபயோகமாகும்படி விஷயப் பொருத்தம் விடாது 874-பாடலாகத் திரட்டப் பட்டு அவசியமான விடங்களிற் குறிப்புரை எழுதப்பட்டு உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் சுத்தப்பிரதியாக அச்சிடப்பட் டிருக்கின்றது. இது முமுட்சுக்க ளொவ்வொருவராலும் அத்தியாவசியகமாய் விரும்பத்தக்க தென்பது மிகு பிரசித்தம். காலிக்கோ பைண்ட் - விலை ரூபாய் 1 - 0 - 0.

---

## சிவப்பிரகாசப் பெருந்திரட்டு.

(குறுந்திரட்டுடன்).

இது சொரூபானந்தரால் திரட்டப்பட்டது;

இதுகாறும் வெளிவராதது;

சாஸ்திரரூபமாயுள்ளது.

இதில் 224 அதிகாரங்க ளிருக்கின்றன. முமுட்சுக்களுக்கே யன்றி, மதங்களின் சொருபங்களையும் அவற்றின் பேதங்களையும் அறிய விருப்ப முடையாருக்கும், உபந்நியாசர்கட்கு மிந்நூல் பெருங் கருவியா யுள்ளது. இதில் 2821 செய்யுட்க ளிருக்கின்றன;பெருந்திரட்டிலில்லாதகுறுந்திரட்டின் 424செய்யுட்களு மிருக்கின்றன. இது டிம்மி 8 - பக்கங்கொண்ட 80 - பாரவளவுள்ள புத்தகம். விலை ரூபாய் மூன்று.

---

## ஆநந்த ராமாயணம்.

இதுகாறும் தமிழில் வாராதது. இது வால்மீகி மகரிஷியால் வடமொழியி லியற்றப்பட்டது இதில் வால்மீகி ராமாயணத்திலில்லாத அநேக விஷயங்களிருக்கின்றன. ரூபாய் 5.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| விஷ்ணு புராணம் ரூ | 2 | 8 | வேதாந்த பரிபாஷை | 0 | 10 |
| அத்யாத்மராமாயணம் | 2 | 8 | நவநீதசாரம் | 0 | 8 |
| குமாரதேவசாஸ்திரம் | 0 | 10 | வேதாந்த சாரம் | 0 | 10 |
| வள்ளலார் சாஸ்திரம் | 1 | 8 | மோட்சசாதன விளக்கம் | 2 | 0 |
| இந்து பைபில் | 1 | 12 | அறிவானந்த சித்தியார் | 0 | 4 |
| மதவிருஷம் | 1 | 12 | சிவமகிம்ந ஸ்தோத்திரம் | 0 | 1 |
| பிரபஞ்ஜோற்பத்தி | 2 | 0 | நாடகம் | 0 | 4 |
| நாலாயிரப் பிரபந்தம் | 3 | 10 | மநநமாலை | 0 | 2 |
| நியாயப்பிரகாசம் | 4 | 0 | தோத்திரக்கொத்து | 0 | 1 |
| பக்தமாலாவசனம் | 3 | 8 | விருத்திரத்னவலி | 0 | 12 |
| வேதாந்தமநந சிந்தாமணி | 4 | 0 | பாலபோதம் | 1 | 0 |
| தத்துவநிஜாநுபோகசாரம் | 1 | 0 | விசாரசந்திரோதயம் | I | 4 |
| சர்வமத சித்தாந்தவிளக்கம் | 0 | 14 | பஞ்சதசி-2 வால்யம் | 10 | 0 |
| திருக்குத்திருசியவிவேகம் | 0 | 14 | விருத்திப் பிரபாகரம் | 4 | 0 |
| வேதாந்த இலக்கணம் | 0 | 8 | அபரோக்ஷாநுபூதி | 0 | 5 |
| நிஷ்டாநுபூதி உரையுடன் | 0 | 10 | பஞ்சீகரண முதலியன | 0 | 12 |
| மகாவாக்கிய ரகசியம் | 0 | 4 | உத்தரகீதை | 0 | 4 |
| சொரூபசாரம்-உரையுடன் | 0 | 6 | குருகீதை | 0 | 6 |
| சூதசங்கிதை வசனம் | 1 | 0 | இராமகீதை | 0 | 3 |
| சித்தாந்த பிந்து | 0 | 8 | தருக்க கௌமுதி | 0 | 6 |

| | | |
|---|---|---|
| கம்பராமாயணம் வசனம் 2 - வால்யம் படத்துடன் | 6 | 0 |
| திருக்குறள் - பரிமேலழகருரை தெளிபொருள் விளக்கம், கருத்துரை-குறிப்புரை-2 வால்யம். | 6 | 0 |
| திருமூலர் திருமந்திரம் குறிப்புரையுடன் | 3 | 8 |
| சர்வதரிசன சங்கிரகம் - இதில் உலோகாயத முதல் வேதாந்த மீறாகப் பதினாறு மதங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. | 2 | 8 |
| பிரபுலிங்கலீலை-உரையுடன் | 2 | 8 |
| கைவல்யம்-பொன்னம்பல சுவாமிகளுரை | 2 | 4 |
| கைவல்யம்-சச்சிதானந்த சுவாமிகளுரை | 1 | 0 |
| வேதாந்த சூளாமணி உரையுடன் | 1 | 4 |
| பஞ்சதசப் பிரகரணம்-வசனம் | 1 | 0 |

| | | |
|---|---|---|
| தருக்கபரிபாஷை-தமிப்புரையுடன் | 1 | 0 |
| பஞ்சதசி-செய்யுள்-பாக்கெட் சைஸ் | 0 | 10 |
| திருவாசகம்-பாக்கெட்சைஸ் | 0 | 10 |
| தருக்காமிர்தமும்-பிரஸ்தான பேதமும் | 0 | 8 |
| வேதாந்த சித்தாந்த சாரசங்கிரகம் | 0 | 8 |
| தசகாரிய மகாவாக்யம் உரையுடன் | 0 | 3 |
| பிரத்தியட்சாநுபூதி விளக்கம் | 0 | 8 |
| சிவஞானபோதம் உரையுடன் | 0 | 8 |
| பாட்டியற்கொத்து - உரையுடன்-இதில் வச்சணந்திமாலை, சிதம்பரப் பாட்டியலின் பொருத்தவியல் மரபியல். நவநீதப்பாட்டியல் அடங்கியிருக்கின்றன | 0 | 6 |
| வேதாந்தசாராமிர்தமும், அத்துவித ரச மஞ்சரி மூலமும்-உரையும் | 0 | 6 |
| விவேகசிந்தாமணி-வேதாந்த பரிச்சேதம் | 0 | 6 |
| ஆத்மபோதமும்-தத்துவபோதமும் | 0 | 5 |
| ஞானசாரத்தாலாட்டு உரையுடன் | 0 | 4 |
| ஸ்ரீ சங்கர நீலகண்டாசாரிய சம்வாதம் | 0 | 4 |
| கைவல்லியநவநீதம்-மூலம் பாக்கெட்சைஸ் | 0 | 3 |
| வேதாந்த சூடாமணி-மூலம்பாக்கெட்சைஸ் | 0 | 2½ |
| வாக்யசுதையென்னும் திருக்குத்திருசிய விவேகம்-மூலமும்-உரையும் | 0 | 2 |
| தத்துவமசி மகாவாக்யமும் 4மகாவாக்யமும் | 0 | 2 |
| பிரஹ்மவித்தாசீர்வாத பத்ததி | 0 | 1 |
| அத்துவிதவுண்மை-பாக்கெட் சைஸ் | 0 | 1 |

லோகோபகாரி ஆபீசு,

கோமளேசுவரன் பேட்டை, சென்னை.